உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்
நிற்க அதற்குத் தக
www.Thirukkural.ValaiTamil.com




திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

திருவள்ளுவராண்டு 2054 நவம்பர்(ஐப்பசி)-2023 மலர்: 1 இதழ்: 2

# அரசுப்பள்ளி மாணவர்களுக்கான இலவசத் திருக்குறள் முற்றோதல் பயிற்சி

முனைவர். ஔவை அருள்
இயக்குநர், தமிழ் வளர்ச்சித் துறை.

திரு. மயில்சாமி அண்ணாதுரை
இஸ்ரோ விஞ்ஞானி

டாக்டர் விஜய் ஜானகிராமன்
புரவலர், ஹார்வர்டு தமிழ் இருக்கை, USA.

# "குறள் வழி" மாத இதழ்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை, திருக்குறள் சார்ந்த உலக முன்னெடுப்புகளை, பரப்புரைகளை தாங்கி மாதம் ஒருமுறை வரும் இதழ்.

## ஆசிரியர் குழு



வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி



அஜய்குமார் செல்வன், சென்னை



மேகா சக்தி பாரதி, கோவை



வி.நிரஞ்சனா, புதுச்சேரி



வி.ஹேமா, திருச்சி

## ஆலோசனைக் குழு



சி.இராஜேந்திரன், IRS (ஓய்வு)



இரவி சொக்கலிங்கம்

## செப்டம்பர் 2023 மாத, "குறள் வழி" முதல் மாத இதழ் உங்கள் வாசிப்பிற்கு

- **To Read as a book:** https://issuu.com/kuralvazhi/docs/kuralvazhi-1
- **Magazine Page:** https://www.valaitamil.com/literature_thirukkural_kural-vazhi/
- **To download as PDF :** https://drive.google.com/file/d/1ot9fMUlcDBchL1cDZM3bpxNdwYjmBvur/view?usp=sharing
- **உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுத, படைப்புகளை அனுப்ப** : kural.mutrothal@gmail.com
- Facebook Page to LIKE and SHARE: https://www.facebook.com/groups/245630171535251

உங்கள் மாவட்டத்தில், உங்கள் அமைப்பில் நடைபெறும் திருக்குறள் சார்ந்த நிகழ்வுகளை எங்களுக்கு அனுப்பவும். மேலும், இவ்விதழ் குறித்த உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதி அடுத்த இதழில் வாசகர் பகுதியில் இடம்பெறச் செய்யவும்.



# உள்ளே...



**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்**

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

**மாவட்டப் பயிற்சியாளர்கள்**

செங்கல்பட்டு



திருமதி. பி. கற்பகவள்ளி
+91 99525 73398

அரியலூர், புதுச்சேரி



திருமதி. சங்கீதா கண்ணன்
+91 78718 39331

திண்டுக்கல்



திரு. வெ.செல்வன்
+91 97884 25501

தஞ்சை



திருமதி. ச. ஆனந்தி
+91 96008 90134

**தலைமைப் பயிற்சியாளர்கள்**



+91 99385 11065



+91 88385 11065



+91 63802 78863



+91 92802 53329



+91 98944 59052

**அனைத்து மாவட்டங்களுக்கும் மாவட்டப் பயிற்சியாளர்கள் விரைவில் நியமிக்கப்படுவர்.**

**தேவை:** மாவட்ட அளவில் திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க ஆர்வமும், அனுபவமும் உள்ள பயிற்சியாளர்கள், புரவலர்கள்.

**மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஆண்டுக்கு 80000 திருக்குறள் நூல்களை அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்: உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA**

**ஒருங்கிணைப்பாளர்கள்**













**பயிற்சி விவரங்களுக்கு**

E-Mail: kural.mutrothal@gmail.com
Web: https://Thirukkural.ValaiTamil.com
Whatsapp: +917358644673

மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள் கீழ்காணும் பதாகையை உங்கள் அமைப்பின் இலச்சினை (Logo) அல்லது பெயர் போட்டு வடிவமைத்து உங்கள் மாவட்ட நிகழ்ச்சிகளில் பயன்படுத்தவும்.



**உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம்**

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்**

இணைந்து வழங்கும்

**அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசத் திருக்குறள் நூல்கள் வழங்கி, முற்றோதல் பயிற்சி தொடக்க விழா**






Scan QR Code
To Read Books

## ஆசிரியர் பக்கம்

தமிழ் உறவுகளுக்கு அன்பான வணக்கம்,

வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், Service 2 Society தன்னார்வக் குழுவினர் இணைந்து நடத்தும் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் மாதாந்திர செய்தி இதழாக "குறள் வழி" மின்னிதழ் தொடங்கப்பட்டு இரண்டாவது இதழ் மூலம் உங்களுடன் உரையாடுவதில் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன்.

உலகின் உன்னதமான வாழ்வியல் நூலான திருக்குறள் இன்று உலகின் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு, இந்தியாவிற்கு வெளியே பல நாடுகளில் வாசிக்கப்படுகிறது. ஆனால் தமிழ்நாட்டில் உள்ள பெரும்பாலான மக்கள் திருக்குறளை இன்னும் உள்வாங்கவில்லை, அதன் மேம்பட்ட கருத்துகள்படி வாழ்ந்து உயரவில்லை. இது குறித்து ஆராயும்போது வகுக்கப்பட்ட பல்வேறு பரப்புரை வியூகத்தில் ஒன்றுதான் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்.

இதுவரை தமிழ்நாட்டில் உள்ள 38 மாவட்டங்களுக்கும், புதுச்சேரிக்கும் தொடர்பாளர்களை அடையாளம் கண்டு, முதல்கட்டமாக ஒவ்வொருவருக்கும் சுமார் 1000 நூல்கள் வீதம் 40000 (நாற்பதாயிரம்) நூல்கள் அனுப்பப்பட்டு ள்ளது. இவ்வாண்டுக்கான அடுத்த 40000 நூல்கள் அனுப்பப்பட இருக்கிறது. அரசின் மாவட்ட நிர்வாகத்துடன் இணைந்து, மாவட்டங்களில் திருக்குறள் பரப்புரையில், பயிற்சியில் ஈடுபட்டுள்ள தனி மனிதர்கள், அமைப்புகளுடன் கைகோர்த்து பயணிக்கிறது இவ்வியக்கம். இதுவரை 21 மாவட்டங்களில் மாவட்ட ஆட்சியர், மாவட்ட தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர், பள்ளிக்கல்வித்துறை அதிகாரிகள் ஆகியோரைக் கொண்டு அரசுப்பள்ளி தலைமையாசிரியர்களுக்கு நூல்கள் வழங்கப்பட்டு இலவசப் பயிற்சி விவரங்கள் பகிரப்பட்டுள்ளது.

நம் அடுத்த இலக்காக ஒவ்வொரு மாவட்டத்திலும் தமிழ்-திருக்குறள் படித்த ஒருவரை அடையாளம் கண்டு, புரவலர்களை அடையாளம் கண்டு ஒரு முற்றோதல் மாவட்டப் பயிற்சியாளரை நியமித்து வருகிறோம். மேலும், நம் இயக்கத்தின் "குறள் வழி" மாத இதழை அச்சுப்பிரதியாக மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்கள், புரவலர்களுக்கு அனுப்பவிருக்கிறோம்.

தலைமைப் பயிற்சியாளர் திருக்குறள் காமராசு அவர்கள் வழங்கும் இணையவழிப் பயிற்சியை விரிவாக்க, நம்மிடம் நூல்கள் கேட்டு விண்ணப்பித்து நூல்களைப் பெற்றுள்ள, அல்லது பெறவிருக்கும் சுமார் 280க்கும் மேற்பட்ட அரசுப்பள்ளி மாணவர்கள் ஒவ்வொரு நாளும் நடக்கும் முற்றோதல் பயிற்சியில் கலந்துகொள்ள உரிய வழிமுறைகளைத் தெரிவித்து வருகிறோம்.

தமிழ்நாட்டைத் தொடர்ந்து, அமெரிக்கா, கனடா உள்ளிட்ட நாடுகளுக்குப் பயிற்சியளிக்க பொறுப்பாளர்களை நியமித்து அமெரிக்காவிற்கு திரு.காமராஜ அவர்களும், கனடாவிற்கு திரு.கோபிசிங் அவர்களும் பயிற்சியை வழங்கவிருக்கிறார்கள்.

ஆர்வமுள்ள உலகத் தமிழர்கள் தங்கள் குழந்தைகளுக்கு திருக்குறள் முற்றோதல் பயிற்சி வழங்க முன்வரவேண்டும். இதன் சேவை தொய்வில்லாமல் தற்சார்பு அடைய உங்கள் அனைவரின் ஒத்துழைப்பும், ஆலோசனையும், வழிகாட்டுதலும், பங்களிப்பும் தேவை. இந்தத் தொலைநோக்கு முயற்சியில் அனைவரும் துணைநிற்க அழைக்கிறோம். தொடர்ந்து பயணிப்போம். வாழ்த்துகள்.. நன்றி..

திட்ட ஒருங்கிணைப்பாளர், *வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி*



# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - என்ன செய்கிறது?

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாக தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாக திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு. கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்த சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது.பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார். {தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளை திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ்வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 80,000 திருக்குறள் நூல்களையும், ஐந்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது.

**இயக்கம் நன்கொடை பெறுவதில்லை.. உங்கள் மாவட்ட திருக்குறள் பரப்புரை தேவைகளுக்கு பொறுப்பேற்க திருக்குறள் புரவலர்களை அழைக்கிறோம்.**

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் அந்த மாவட்டத்தை சார்ந்த திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஒருவரை அடையாளம் கண்டு அல்லது உருவாக்கி பகுதிநேர-முழுநேர திருக்குறள் பயிற்சி வழங்க ஊக்கத்தொகை, மாணவர்களுக்கு சான்றிதழ் அச்சடித்தல், "குறள் வழி" இதழுக்கு விளம்பரம் கொடுத்து இலவச இதழ்களை அனுப்ப உதவுதல் என்று சுயமாக உங்கள் மாவட்டத்தில் பொறுப்பேற்க அழைக்கிறோம். ஊர் கூடி பயணிக்கும் திருக்குறள் தேரை இழுக்க வடம் பிடிக்க வாருங்கள். எமக்கு அறம் சார்ந்த வணிகர்கள் அவர்கள் தொழில்களை விளம்பரம் செய்து உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் பரப்புரைக்கு உதவலாம்.*





# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

**1.** தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் தொடர்ந்து, **1330** திருக்குறளையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அறம் சார்ந்த, பொருள் வளம்மிக்க நல்லிணக்க சமுதாயத்தைக் கட்டமைத்தல்.

**2.** பள்ளித் தலைமை ஆசிரியர்கள்/ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சியை **9**-ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு சான்றிதழ் மட்டுமின்றி உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "திருக்குறள் முற்றோதல்-இளநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**3.** வயதுக்கு ஏற்ப, முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாக குறளின் பொருளை அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களுக்கு "திருக்குறள் முற்றோதல்-முதுநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**4.** திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியான அனுபவமும் ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராகவும், அந்த பயிற்சியாளருக்கு மாதம் ரூபாய் **10000** வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்பு செய்ய ஒரு ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.

**5.** ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில், திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் அந்தந்த மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன் ஒன்றுகூடி, தமிழ் வளர்ச்சித்துறை, மாவட்ட நிர்வாகம் ஆகியவற்றுடன் இணைந்து குழுவாக "திருக்குறள் முற்றோதல்" செய்து, கற்றதை மறந்துவிடாமல் இருக்க வழிசெய்தல்.

**6.** குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு, வரிசை எண் கொடுத்து அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியை, வெற்றியைப் பெற துணைநிற்றல்.

**7.** குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று கல்வி, வேலைவாய்ப்பு, மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், வேலைவாய்ப்பில், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளைப் பெற துணைநிற்றல்.

**www.Thirukkural.ValaiTamil.com | Kural.Mutrothal@gmail.com |** 

# திருக்குறள் முற்றோதல் பயிற்சி தொடக்க விழா - முதல் நிகழ்வின் மறுபதிவு..

பள்ளிக் கல்வித்துறை மற்றும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் இணைந்து நடத்தும் பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கி முற்றோதல் பயிற்சி தொடக்கவிழா, தி.நகர், சென்னை, ஹோலி ஏஞ்சல் ஆங்கிலோ இந்தியன் மேல்நிலைப்பள்ளியில் இன்று (05.12.2022) காலை 9:30 மணிக்கு நடைபெற்றது.

திருக்குறள் நூல்களை இவ்வாண்டு, முதல் மாவட்டமாக சென்னைக்கு வழங்கி **மாண்புமிகு கல்வியமைச்சர் திரு. அன்பில் மகேஷ் பொய்யாமொழி** அவர்கள் 05-12-2022 (திங்கள்கிழமை) அன்று தொடங்கிவைத்து சிறப்புரையாற்றினார்.

### அமைச்சர் உரை

திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் முன்னெடுப்பில் வழங்கப்படும் 80000 திருக்குறள் நூல்களை தொடங்கிவைத்து, முற்றோதல் பயிற்சி ஆசிரியர்களை வாழ்த்துவதில் பெருமிதம் அடைகிறேன். இந்த நிகழ்ச்சியில் முக்கியமானவர்கள் மாணவர்கள், அவர்களையும் ஆசிரியர் பெருமக்களையும் பாராட்டுறேன். இந்த இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளர்கள் திரு.பார்த்தசாரதி, திரு.ராஜேந்திரன் IRS மற்றும் திரு.ரவி சொக்கலிங்கம் ஆகியோரை வாழ்த்துகிறேன்.

ஒன்றாம் வகுப்பு படிக்கும் திருவண்ணாமலை மாவட்டத்தைச் சார்ந்த இலக்கியா அருமையாக திருக்குறள் சொல்லும்பது இரு தினங்களுக்கு முன்பு தமிழ் மொழி இலக்கிய திறனறித் தேர்வில் திருவண்ணாமலை மாவட்டம் முதன்மையாக வந்துள்ளதை நினைவுபடுத்துகிறது.

முதலமைச்சர் குறிப்பிட்டதைப்போல தமிழரசன், தமிழரசி என்று தமிழ் உணர்வுடன் பெயர் வைக்கிறார்கள் என்றால் நம் தமிழ் மக்கள் மொழியின்மீது கொண்டுள்ள பற்றின் அடையாளம் என்று குறிப்பிட்டார்.

முத்தமிழ் அறிஞர் கலைஞர் செய்த திருக்குறள் தொடர்பான செயல்பாடுகளை குறிப்பிட்ட அமைச்சர் சட்டசபையில் திருவள்ளுவர் படம் வைத்ததையும், கன்னியாகுமரியில் சிலை நிறுவியத்தையும், கலைஞரின் திருக்குறள் உரையையும் பெருமிதத்துடன் குறிப்பிட்டார்.

இந்நிகழ்ச்சியில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளர்கள் திரு.ச.பார்த்தசாரதி, திரு.சி.இராஜேந்திரன் IRS (ஓய்வு) மற்றும் திரு. இரவி சொக்கலிங்கம் ஆகிய மூவரும் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினர். எக்ஸ்னோரா தலைவர் திரு.செந்தூர்பாரி கலந்துகொண்டு சிறப்பித்தார்.

இந்நிகழ்ச்சியில் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சியில் தமிழக அளவில் ஈடுபட்டுள்ள தலைமைப் பயிற்சியாளர்கள் மற்றும் மாவட்டப் பயிற்சியாளர்கள் ஆகியோருக்கு கல்வியமைச்சர் பொன்னாடை போர்த்தி பட்டயம் வழங்கி சிறப்பு செய்தார்.



# திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "குறள் வழி" மின் இதழ் தொடக்க விழா

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் வழங்கும் குறள் வழி முற்றோதல் மாத மின்னிதழ் தொடக்க விழா அக்டோபர் 10, செவ்வாய் கிழமை இந்திய நேரம் ஏழு மணி அளவில் இணையவழியில் நடைபெற்றது.

நிகழ்வின் தொடக்கமாக சர்விஸ் டு சொஸைட்டி நிறுவனர் திரு.இரவி சொக்கலிங்கம் அவர்கள் அனைவரையும் வரவேற்று, திருக்குறள் புத்தகங்கள் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் வழங்கப்பட்டதையும் மேலும் திருக்குறள் தொடர்பான நிகழ்ச்சிகளை ஆவணப்படுத்துவதன் மேன்மையையும் கூறினார். இந்த திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் மின் இதழ் தொடக்க விழாவில் பேசிய அவர் மின் இதழை வடிவமைக்கும் குழுவில் உள்ள இளைஞர்களையும் அவர்களை வழிநடத்தும் பயிற்சியாளர்கள் மற்றும் இந்த மின் இதழ் தொடர்பான சிந்தனையை வழங்கிய திரு. பார்த்தசாரதி அவர்களை வாழ்த்தினார். அதனைத் தொடர்ந்து சிறப்பான திருக்குறள் பாடல் பாடி செல்வி.கனிஷ்கா தொடங்கி வைத்தார். இந்த விழாவின் முதற் கட்டமாக வரவேற்புரையை திரு.ராஜேந்திரன், IRS (ஓய்வு) அவர்கள் வழங்கினார்கள். இவ்விழாவில் கலந்து கொண்ட ஆசிரியர் குழு உறுப்பினர்களை வரவேற்று இறுதியாக திருக்குறள் முற்றோதல் முடித்த பத்து வயதிற்குட்பட்ட பள்ளி மாணவ மாணவிகளையும் வரவேற்றார்.

அடுத்ததாக வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி நோக்கவுரையாற்றினார். இவ்விழாவின் நோக்கத்தையும் இதுவரை எடுக்க பட்ட முயற்சிகளையும், திருக்குறளை வளர்ப்பது தமிழர்களின் கடமை என்றும் கூறி தன் உரையை நிறைவு செய்தார். அடுத்து வாழ்த்துரை வழங்கிய மருத்துவர், உலகத் தமிழ் வளர்ச்சி மன்ற நிறுவனர் ஜானகிராமன் அவர்கள், பரிசுத்தொகை வழங்குவதோடு மட்டுமல்லாமல் மாணவர்களை நல்ல மனம் உடையவர்களாகவும் இந்நிகழ்வு மாற்றியுள்ளது என்றும், மாணவர்கள் மூலம் இச்சமூகம் நல்வழி பெறும் எனவும் கூறினார்.அவரைத் தொடர்ந்து திரு.பழனி அவர்கள் இந்நிகழ்வு தமிழ் நாட்டின் வளர்ச்சி நிகழ்வு என்ற கருத்தை முன்வைத்தார். திருக்குறளை மனனம் செய்வது ஒழுக்கம், நினைவாற்றல் மற்றும் கல்வி வளர்ச்சிக்கு வழிகோலும் எனத் தெரிவித்தார்.

அதனைத் தொடர்ந்து 10 வயதிற்குட்பட்ட முற்றோதல் முடித்த மாணவர்கள் திருக்குறள் அதிகாரம் ஒன்றினைக் கூறினார்கள்.அதன் பின் ஆசிரியர் குழு உறுப்பினர்களான அஜய் குமார் செல்வன், மேகா சக்தி பாரதி, ஹேமா, நிரஞ்சனா ஆகியோர் தங்கள் கருத்துகளை கூறினார்கள்.

ஒவ்வொரு மாவட்டத்திலும் திருக்குறளை பயிற்றுவிக்கும் பயிற்சியாளர்களான, திரு. காமராசு , திருமதி.சங்கீதா கண்ணன், திரு. கோபி சிங், திரு.செல்வம், திருமதி.ஆனந்தி மற்றும் திருமதி.கற்பகவள்ளி ஆகியோர் தங்களது கருத்துகளையும், இவ்விழாவின் சிறப்பையும் குறித்து பேசினார்கள்.

திரு. குழந்தைவேல் இராமசாமி சில முக்கிய கருத்துகளை முன்வைத்தார். "மாணவர்கள் தற்போது எவற்றை கற்றாலும் அவற்றை ஆயுட்காலம் முடியும் வரை மறக்க மாட்டார்கள்" என்றுக் கூறி, அவர்கள் பயிற்றுவிக்கப்படும் போது சரியாக பயிற்றுவிக்க பட வேண்டும் என்றும் பயிற்சியாளர்களுக்கு அறிவுரை வழங்கினார். திரு.செல்வம் அவர்கள், "குறள் வழி நடப்போம், தமிழ் மொழி காப்போம்" என்ற வாசகத்தை முன்வைத்தார். நிகழ்ச்சியின் நிறைவாக திரு.இரவி சொக்கலிங்கம் அவர்கள் நன்றியுரை வழங்கினார்.

**காணொளி**

https://www.youtube.com/watch?v=6sARxxRYUYw






வழங்கும்




## தொடக்க விழா

நாள் : 10-Oct-2023
செவ்வாய்க்கிழமை
நேரம்: 7:00 PM (IST)

zoom
Meeting ID : 958 1611 4007
Passcode : 1330
LIVE
www.ValaiTamil.TV

**வரவேற்புரை**
திரு. சி.இராஜேந்திரன், IRS (ஓய்வு)
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்

**நோக்கவுரை**
திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்

**நன்றியுரை**
திரு. இரவி சொக்கலிங்கம்
நிறுவனர், S2S அறக்கட்டளை

**ஆசிரியர் குழு**

அஜய்குமார் செல்வன் – சென்னை
மேகா சக்தி பாரதி – கோவை
வி.நிரஞ்சனா – சென்னை
சா.புவியரசன் – தஞ்சாவூர்
வி.ஹேமா – திருச்சி

**திருக்குறள் பாடல்**
செ. கனிஷ்கா

**குறள் சொல்லி தொடங்கி வைப்பவர்கள்**
**10 வயதுக்குட்பட்ட முற்றோதல் முடித்த மாணவர்கள்**

அ.மித்துல் கிருஷ்ணா – வயது-8, செங்கல்பட்டு.
ந.லேகா தமிழ் தனம் – வயது-8, கிழக்கு தாம்பரம்.
செ.பி நரேன் – வயது-9, தஞ்சாவூர்.
ச. பிரதீஷ் – வயது-7, செங்கல்பட்டு.
ர.செ. ரோனித் – வயது-9, சென்னை.
ர.அகிலேஷ் – வயது-7, இராஜபாளையம்.
கோ.மகாபரணி – வயது-7, திருவாரூர்.
ச. நி. சனந்தா – வயது-4, தாம்பரம்.
இரா.தாரனேஷ்வர் – வயது-9, செங்கல்பட்டு.
க.இலக்கியா – வயது-6, திருவண்ணாமலை.
க.இளமாறன் – வயது-3, திருவண்ணாமலை.

தொடர்பு கொள்ள:
www.Thirukkural.ValaiTamil.com || kural.mutrothal@gmail.com || +91 73055 71897

இவ்விழா இனிதே நிறைவுற்றது.

*தொகுப்பு : ஹேமா*

# 2022 சனவரி மாதம் அரசு நடத்திய மாவட்ட அளவிலான திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்கள் - மாவட்டங்கள்

2022 சனவரி மாதம் அரசு நடத்திய மாவட்ட அளவிலான திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றிபெற்ற மாணவர்களுக்கு ரூபாய் 15000 மற்றும் தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் சான்றிதழ் வழங்கப்பட்டுவருகிறது. இதுவரை மாநிலம் முழுவதும் மொத்தம் 70 பேர் மட்டுமே (சராசரியாக மாவட்டத்திற்கு 2 பேர்) என்ற கட்டுப்பாடு நீங்கி முதல்முறையாக எத்தனைபேர் வேண்டுமானாலும் பங்கேற்கலாம் என்று அரசு அறிவித்தபிறகு திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களின் எண்ணிக்கை 77.14 விழுக்காடு உயர்ந்துள்ளது.

2022 ஆம் ஆண்டு தேர்வான மாணவ-மாணவிகளின் எண்ணிக்கை விவரங்களை ஆய்வு செய்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் தன்னார்வ அமைப்பு கவனம் செலுத்தவேண்டிய மாவட்டங்களில் இலவசத் திருக்குறள் நூல்கள் வழங்கி, இலவசப் பயிற்சியை வழங்க உரிய வாய்ப்புள்ளவர்களுடன் இணைந்து முயற்சி மேற்கொள்கிறது..

### 2022 ,சனவரி மாதம் நடந்த முற்றோதல் போட்டியில் தமிழ்நாடு மாவட்ட அளவில் திருக்குறள் முற்றோதல் செய்து தமிழக அரசின் 15000 ரூபாய் பரிசையும் , சான்றிதழையும் பெற்ற மாணவ-மாணவியரின் எண்ணிக்கை

| எண் | மாவட்டம் | மாணவ - மாணவியர் எண்ணிக் |
|---|---|---|
| 1 | செங்கல்பட்டு | 15 |
| 2 | கன்னியாகுமரி | 14 |
| 3 | திருவண்ணாமலை | 12 |
| 4 | தஞ்சாவூர் | 10 |
| 5 | விருதுநகர் | 9 |
| 6 | திருச்சி | 8 |
| 7 | திருவள்ளூர் | 6 |
| 8 | சிவகங்கை | 6 |
| 9 | விழுப்புரம் | 6 |
| 10 | திண்டுக்கல் | 4 |
| 11 | தேனி | 4 |
| 12 | அரியலூர் | 2 |
| 13 | கிருஷ்ணகிரி | 2 |
| 14 | கோயம்புத்தூர் | 2 |
| 15 | சென்னை | 2 |
| 16 | சேலம் | 2 |
| 17 | திருப்பூர் | 2 |
| 18 | திருவாரூர் | 2 |
| 19 | தூத்துக்குடி | 2 |
| 20 | தென்காசி | 2 |
| 21 | நாமக்கல் | 2 |
| 22 | இராணிப்பேட்டை | 1 |
| 23 | ஈரோடு | 1 |
| 24 | கடலூர் | 1 |
| 25 | காஞ்சிபுரம் | 1 |
| 26 | திருநெல்வேலி | 1 |
| 27 | நாகப்பட்டினம் | 1 |
| 28 | நீலகிரி | 1 |
| 29 | புதுக்கோட்டை | 1 |
| 30 | பெரம்பலூர் | 1 |
| 31 | மதுரை | 1 |
| 32 | இராமநாதபுரம் | 0 |
| 33 | கரூர் | 0 |
| 34 | கள்ளக்குறிச்சி | 0 |
| 35 | தருமபுரி | 0 |
| 36 | திருப்பத்தூர் | 0 |
| 37 | மயிலாடுதுறை | 0 |
| 38 | வேலூர் | 0 |
| | TOTAL | 124 |

**மாநில அளவில் முற்றோதல் பரிசு பெற்ற மொத்த மாணவர்கள் : 124**

ஆண்டுக்கு 70 பேருக்கு பரிசு என்ற கட்டுப்பாடு நீங்கியபிறகு உயர்ந்துள்ள மாணவர்களின் விழுக்காடு

**77.14**

முற்றோதலில் முன்னணி மாவட்டங்கள்:

| எண் | மாவட்டம் | மாணவ - மாணவியர் எண்ணிக் |
|---|---|---|
| 1 | செங்கல்பட்டு | 15 |
| 2 | கன்னியாகுமரி | 14 |
| 3 | திருவண்ணாமலை | 12 |
| 4 | தஞ்சாவூர் | 10 |
| 5 | விருதுநகர் | 9 |
| 6 | திருச்சி | 8 |
| 7 | திருவள்ளூர் | 6 |
| 8 | சிவகங்கை | 6 |
| 9 | விழுப்புரம் | 6 |

முற்றோதலில் கவனம் செலுத்தப்படவேண்டிய மாவட்டங்கள்

| எண் | மாவட்டம் | மாணவ - மாணவியர் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | இராமநாதபுரம் | 0 |
| 2 | கரூர் | 0 |
| 3 | கள்ளக்குறிச்சி | 0 |
| 4 | தருமபுரி | 0 |
| 5 | திருப்பத்தூர் | 0 |
| 6 | மயிலாடுதுறை | 0 |
| 7 | வேலூர் | 0 |

**தகவல் தொகுப்பு:**




முற்றோதலில் ஆர்வம் உள்ள மாணவர்களுக்கு இலவசப் பயிற்சியும், இலவச திருக்குறள் நூலும் பெற உங்கள் மாவட்ட உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சித் தொடர்பாளரை தொடர்புகொள்க:

www.Thirukkural.ValaiTamil.Com | Kural.Mutrothal@gmail.com

# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் இலவச இணையவழி முற்றோதல் பயிற்சி தொடக்கவிழா…

தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அருள் அவர்கள், முனைவர்.மயில்சாமி அண்ணாதுரை ஆகியோர் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

அக்டோபர் 14, 2023 அன்று திருக்குறள் முற்றோதல் பயிற்சியை பரவலாக்கல் செய்யும் நோக்கில் தமிழ்நாட்டின் அனைத்து அரசுப்பள்ளி மாணவர்களும் பயன்பெறும் வகையில் இணையவழவழியில் இலவசப் பயிற்சியை வழங்க உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் www.ValaiTamil.TV வழியே இச்சேவையை தொடங்கியது. இந்நிகழ்வை தமிழ்நாடு தமிழ்வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அவ்வை.அருள் அவர்கள் தொடங்கிவைத்தார், சந்திராயன் புகழ் முனைவர்.மயில்சாமி அண்ணாதுரை மற்றும் ஹார்வார்டு பல்கலைக்கழகத்தில் தமிழிருக்கையை நிறுவிய அமைப்பின் தலைவர் மற்றும் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் தலைவர் மருத்துவர் விஜய் ஜானகிராமன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

திரு.ராஜேந்திரன் IRS அவர்கள் வரவேற்புரை வழங்கி நிகழ்ச்சியைத் தொடங்கினார். வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி அவர்கள் நோக்கவுரை வழங்கினார். திரு.ரவி சொக்கலிங்கம் அவர்கள் விருந்தினர்களை அறிமுகப்படுத்தி நிகழ்ச்சியை நெறியாள்கை செய்தார்.

திரு. மயில்சாமி அண்ணாதுரை உரையாற்றும்போது, அவர்கள் பருவத்தே பயிர் செய் என்பது போல வளரும் இளம் தலைமுறைனர் திருக்குறளை மனனம் செய்ய வேண்டும். அவர்களின் வாழ்வை ஆவணபடுத்தி அடுத்த தலைமுறைனர்க்கு தெரியபடுத்த வேண்டும். திருக்குறள் என்பது உலகத்தவர் அனைவருக்குமான நூல். அதன்மூலம் குறள் வழி சமுதாயம் உருவாக வேண்டும் என்று கூறினார். உலகத் திருக்குறள் முற்றோதல்இயக்க செயல்பாடுகள் மற்றும் குறள் வழி மின் இதழ் செயல்களை பாராட்டினார்.

முனைவர் அவ்வை அருள் அவர்கள் உரையாற்றும்போது, உலகத்தில் அறிஞர் பெயரில் ஆண்டு கொண்டாடும் ஒரே நாடு நம் தமிழ் நாடு திருவள்ளுவர் ஆண்டு என திருக்குறள்கு பெருமை சேர்க்கிறோம். 2000

ஆண்டில் இருந்து குறள் பரிசு தமிழ்நாடு அரசால் வழங்கபடுகிறது. ஆனால் பரிசு வாங்கும் மாணவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. ஆண்டுக்கு 70 மாணவர்களுக்கு மட்டுமே பரிசு என்ற கட்டுப்பாட்டை தளர்த்தி தமிழ்நாடு அரசு திருக்குறள் பரவ அறிவித்துள்ளது எனக் கூறினார்.

தலைமைப் பயிற்சியாளர்கள் பேசினர். இறுதியாக சிறுவன் அகிலேஷ் திருக்குறள் பற்றி பேசினார். விழா இனிதே நிறைவுற்றது.






**காணொளி விவரம்:**
***https://www.youtube.com/watch?v=GzThXGpQlDs***



# நன்றி... நன்றி... நன்றி...🙏



**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்துடன் இணைந்து, தமிழ்நாட்டு அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக திருக்குறள் நூல்களை வழங்கும் உலகத் தமிழ்வளர்ச்சி மன்ற ஒருங்கிணைப்பாளர் மருத்துவர் விஜய் ஜானகிராமன் அவர்களுக்கும், அவருடன் துணைநிற்கும் அனைத்து புரவலர்களுக்கும் நன்றி…**

# மாவட்டத் திருக்குறள் செயல்பாடுகள்

## நாமக்கல் மாவட்டம்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக நாமக்கல் மாவட்டம் இராசிபுரம் வட்டத்திற்குட்பட்ட முத்துக்காளிப்பட்டி, கவுண்டம் பாளையம், கூனவேலம் பட்டி ஊராட்சி ஒன்றி நடுநிலைப்பள்ளிகளில் 6,7.8. படிக்கும் மாணவ மாணவிகளுக்கு திருக்குறள் நூல் வழங்கப்பட்டது. பள்ளியின் முன்னாள் மாணவரும் காசி விநாயகர் திருக்கோவில் தலைவர் திரு. கை. கந்தசாமி ஐயா தலைமையில் செயலாளர் முத்துசாமி அவர்கள் முன்னிலையில் நூல் மாணவ மாணவிகளுக்கு வழங்கப்பட்டது. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க நாமக்கல் மாவட்ட ஒருங்கிணைப்பாளர் பசுமை மா. தில்லை சிவக்குமார் கருத்துரை வழங்கினார் பள்ளி தலைமை ஆசிரியர் ஆசிரியர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.














நாமக்கல் அரசு உயர்நிலைப்பள்ளி, போத்தனூர்.

## நாகப்பட்டினம் மாவட்டம்

### திருக்குறள் முற்றோதல் போட்டிக்கு நவ. 15–க்குள் விண்ணப்பிக்கலாம்

நாகப்பட்டினம், அக். 17: நாகை மாவட்டத்தில் திருக்குறள் முற்றோதல் போட்டிக்கு பள்ளி மாணவர்கள் நவம்பர் 15–ஆம் தேதிக்குள் விண்ணப்பிக்க வேண்டும் என ஆட்சியர் ஜானி டாம் வர்கீஸ் தெரிவித்துள்ளார்.

இதுகுறித்து அவர் வெளியிட்ட செய்திக் குறிப்பு:

திருக்குறள் முற்றோதல் போட்டியில் கலந்து கொள்ளும் மாணவர்கள், திறனறி குழுவினரால் தேர்வு செய்யப்படுவர். இதற்கான திறனாய்வு நாகை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் மூன்றாம் தளத்திலுள்ள தமிழ் வளர்ச்சித் துறையினரால் நடத்தப்படும். திருக்குறள் முற்றோதல் போட்டியில் கலந்து கொள்ளும் மாணவ, மாணவிகள் 1,330 திருக்குறட்பாக்களையும் முழுமையாக ஒப்பிக்கும் திறன் பெற்றவராக இருத்தல் வேண்டும்.

இயல் எண்–பெயர், அதிகாரம் எண்–பெயர், குறள் எண்–பெயர் போன்றவற்றை தெரிவித்தால் அதற்குரிய திருக்குறளைக் கூறும் திறன் பெற்றவராக இருத்தல் வேண்டும். திருக்குறளின் அடைமொழிகள், திருவள்ளுவரின் சிறப்புப் பெயர்கள், திருக்குறளின் சிறப்புகள் ஆகியவற்றை அறிந்தவராக இருத்தல் வேண்டும்.

நாகை மாவட்டத்தில் உள்ள பள்ளியில் பயில்பவராக இருத்தல் வேண்டும். அரசு, அரசு உதவிபெறும் மற்றும் தனியார் பள்ளிகளில் ஒன்றாம் வகுப்பு முதல் பிளஸ் 2 வரை பயிலும் மாணவர்கள் பங்கு பெறலாம்.

எனவே, திருக்குறள் முற்றோதும் திறன்படைத்த மாணவர்கள் **www.tamilvalarchithurai.com** என்ற இணையதள முகவரியில் விண்ணப்பங்களை பதிவிறக்கம் செய்து நாகை மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகம் அறை எண். 307, மூன்றாம் தளத்தில் உள்ள தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அலுவலகத்தில் நவம்பர் 15–ஆம் தேதிக்குள் விண்ணப்பக்க வேண்டும். 1,330 திருக்குறளையும் ஒப்பிக்கும் மாணவர்களுக்கு தலா ரூ.15,000 பரிசுத்தொகை, பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்படும்.

மேலும் விவரங்களுக்கு 04365–251281 என்ற தொலைபேசி எண்ணில் தொடர்பு கொள்ளலாம் எனத் தெரிவித்துள்ளார்.

# தர்மபுரி மாவட்டம்

30.09.2023 அன்று உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் மூலம் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் வழங்கும் திருக்குறள் நூல்கள் பீனிக்ஸ் குழு பாடி மற்றும் பசியில்லா தர்மபுரி சார்பில் இன்று தருமபுரி மாவட்டத்தில் பாடி கிராமத்தில் அரசு பள்ளி மாணவ மாணவிகளுக்கு திருக்குறள் புத்தகம் 100 பேருக்கு வழங்கப்பட்டது இந்நிகழ்வில் முனியப்பன் அரசு பள்ளி தமிழ் ஆசிரியர் மற்றும் சமூக ஆர்வலர் மணி கலந்து கொண்டு சிறப்பித்தனர்...



# திருவண்ணாமலை மாவட்டம்

திருவண்ணாமலை மாவட்டம் செம்மாம்பாடி ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி




அரசு மேல்நிலைப்பள்ளி, பனைஓலைப்பாடி






## ஈரோடு மாவட்டம்

அரசினர் மேல்நிலைப்பள்ளி சத்தியமங்கலம்





## கன்னியாகுமரி மாவட்டம்

நாகர்கோவிலில் 12.10.2023 அன்று நடைபெற்ற தலைமை ஆசிரியர்கள் கலந்தாய்வு கூட்டத்தில் 266 பள்ளி களுக்கு மாவட்ட முதன்மை கல்வி அலுவலர் அவர்கள் முன்னிலையில் திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன... குறளகம் தமிழ்க்குழவி.



17.10.2023 அன்று நாகர்கோவில் கவிமணி அரசு மேல்நிலைப் பள்ளி சென்று 10 மாணவியர்களுக்கு குறளகம் தமிழ்க்குழவி அவர்களால் திருக்குறள் நூல்கள் வழங்கப் பட்டன.



28.10.23 அன்று செண்பகராமன் புதூர் அரசு மேல்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு குறளகம் தமிழ்க்குழவி அவர்கள் திருக்குறள் நூல்கள் வழங்கினார்.



27.10.2023 அன்று மாதவலயம் அரசு மேல்நிலைப் பள்ளியில் திருக்குறள் நூல்களை திரு. குறளகம் தமிழ்க்குழவி அவர்கள் வழங்கினார்கள்..



30.10.2023 பொட்டல் அரசு மேல்நிலைப் பள்ளியில் குறளகம் தமிழ்க்குழவி அவர்கள் திருக்குறள் நூல்கள் வழங்கினார்...



## விருதுநகர் மாவட்டம்

தினமலர் மதுரை | ஞாயிறு | 3.9.2023



சாத்தூர் என்.சுப்பையாபுரம் அரசு பள்ளியில் நடக்கும் திருக்குறள் முற்றோதல் பயிற்சி வகுப்பு. அடுத்த படம்: திருக்குறள் பயிலும் மாணவிகள்.

# மாணவர்களுக்கு திருக்குறள் முற்றோதல் பயிற்சி வகுப்புகள்

## மாவட்ட நிர்வாகம் புதிய முயற்சி

விருதுநகர், செப். 2– விருதுநகர் மாவட்டத்தில் மாணவர்களுக்கு திருக்குறளின் முக்கியத்துவத்தை புரிந்து தெரிந்து கொள்ளும் வகையில் அதற்கென தனியாக முற்றோதல் பயிற்சி வகுப்புகள் துவங்கப்பட்டுள்ளன.

தமிழக அளவில் இந்த புதிய முயற்சியை மாவட்ட நிர்வாகம் செய்துள்ளது பெற்றோர், ஆசிரியர்கள் மத்தியில் வரவேற்பை பெற்றுள்ளது. திருக்குறள் மனித வாழ்வில் இன்றியமையாத கொள்கைகளை இரண்டு அடியில் சொல்கிறது. உலக பொதுமறையான இது உலகில் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ், ஒழுக்கம் விழுப்பம் தரலான், செய்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், யாகாவாராயினும் நா காக்க, அன்பும் அறனும் உடைத் தாயின் இல்வாழ்க்கை என பல முக்கிய குறள்கள் அறத்தையும், அன்பையும் நன்றியையும் ஊட்டுகின்றன. அறம், பொருள், காமம் என வாழ்வியலை பிரித்து நெறியோடு வாழ்வில் ஒத்து போகும் இந்த குறள் தனித்துவம் வாய்ந்தது.

இதை புரிந்து விருதுநகர் மாவட்ட நிர்வாகம் பள்ளி மாணவர்களுக்கான திருக்குறள் முற்றோதல் பயிற்சி வகுப்புகளை நடத்த முன் வந்துள்ளது. துவக்கப்பள்ளிகளில் 3, 4, 5 வகுப்பு மாணவர்களுக்கும், மேல்நிலைப்பள்ளிகளில் 6, 7, 8 வகுப்பு மாணவர்களுக்கும் இந்த முற்றோதல் வகுப்புகள் நடக்கின்றன.

இதன் நோக்கம் மாவட்டத்தில் ஒரே ஆண்டில் ஆயிரம் மாணவர்கள், 1330 குறள்களையும் முற்றோதல் செய்ய வைப்பதாகும். மாணவர்களுக்கு திருக்குறள் பற்றிய அறிவை கொண்டு செல்வதுடன், புரிந்து அதன் படி தங்கள் வாழ்க்கையை மேம்படுத்துவதும் நோக்கம். நாள்தோறும் காலை, மாலை, விடுமுறை நாட்களில் பயிற்சி வகுப்புகள் என அனைத்து வகை பள்ளிகளிலும் நடத்தப்படுகிறது.

சிவகாசி ஆர்.எஸ்.ஆர்., இன்டர்நேஷனல் பள்ளியில் துவக்க வகுப்புகளுக்கு அரும்புகள் என்ற தலைப்பில் துவக்கப்பட்டது. சிவகாசி வட்டார அரசு பள்ளிகளில் இருந்து 114 மாணவர்கள் பதிவு செய்துள்ளனர். சாத்துார் என்.சுப்பையாபுரம் அரசு மேல்நிலைப்பள்ளியில் ஆக. 29ல் துவங்கி வைக்கப்பட்டது.

1330 குறள்களையும் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்கு பரிசு தொகை ரூ.15 ஆயிரம் கலெக்டரால் வழங்கப்படும் எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த முயற்சி பெற்றோர், ஆசிரியர்கள் மத்தியில் நல்ல பாராட்டை பெற்றுள்ளது.

### அன்பு, அறத்தை விளக்கும் குறள்

முற்றோதல் வகுப்புகள் முதன்முறையாக நம் மாவட்டத்தில் துவங்கியது நமக்கு பெருமை. வளரும் குழந்தைகள், தங்கள் மழலை பருவத்திலே திருக்குறளை கற்று கொண்டால் தங்கள் வாழ்வில் நிறைய வெற்றிகளை பெறுவர். அடி உதவுவது போல் அண்ணன் தம்பி கூட உதவாது என்பர். அடி என்பது 4 அடியான நாலடியார், 2 அடியான திருக்குறள் தான். அன்பு, அறம் பற்றி விளக்குகிறது. வாழ்வியல் விஷயங்களுக்கு உளவியல் ரீதியாக தயார்படுத்தும். திருக்குறள்களை அதிக முற்றோதல் செய்யும் மாணவர்கள் கொண்ட மாவட்டமாக விருதுநகர் மாறும்.

**ஜெயமேரி**
ஆசிரியை, ஊராட்சி ஒன்றிய துவக்கப் பள்ளி, க.மடத்துப்பட்டி.

### மன நிறைவு ஏற்படுகிறது

அனைத்து சனிக்கிழமைகளிலும் பயிற்சி வகுப்புகள், அனைத்து நாட்களிலும் காலை 8:30 மணி முதல் 9:15 மணி வரை, மாலை 4:10 மணி முதல் 5:30 மணி வரை கலந்து கொண்டு மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கிறேன். மாணவர்களுக்கு திருக்குறள் கற்று கொடுப்பதால் எனக்கும் ஒரு வித மன நிறைவு ஏற்படுகிறது. சாத்துார் என்.சுப்பையாபுரம் அரசு மேல்நிலைப்பள்ளி மாணவிகள் நான்கு மாணவிகள் திருக்குறளை தேசிய நூலாக அறிவிக்க கோரி 1330 திருக்குறளையும் மனப்பாடமாக 13 மணி நேரத்தில் எழுதினர். இதை ஆல் இந்தியா புக் ஆப் ரெக்கார்ட்ஸ் அங்கீகரித்துள்ளது.

**ராஜசேகர்,**
தமிழாசிரியர், என்.சுப்பையாபுரம் அரசு மேல்நிலைப்பள்ளி, சாத்துார்.

### முக்கியத்துவம் அறிவர்

பொருள் உணர்ந்து 1330 குறளையும் கூறும் பள்ளி மாணவர்களுக்கு கலெக்டர் பரிசு தொகை வழங்குகிறார். இந்த வகுப்பின் நோக்கம் திருக்குறளின் முக்கியத்துவத்தை அறிந்து கொள்ள தான். எந்த ஒரு நபர் குறளை புரிந்து கொள்கிறாரோ, அவர் கண்டிப்பாக வாழ்வில் வெற்றி பெறுவார். இதில் விருப்பமுள்ள பள்ளிகள் தானாக முன் வரலாம். இன்னும் பயிற்சி வகுப்புகள் அதிகரிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது. கலெக்டரின் இந்த முயற்சி பாராட்டுக்குரியது.

**ராமன்,**
முதன்மை கல்வி அலுவலர், விருதுநகர்.

பாரதி நடுநிலைபள்ளி அப்பநாய்க்கணபட்டி





# பெரம்பலூர் மாவட்டம்

## திருக்குறள் முற்றோதல் பாராட்டு பரிசு திட்டம்

**மாணவ, மாணவிகள் பங்கேற்க கலெக்டர் அழைப்பு**

பெரம்பலூர், அக்.14: பெரம்பலூர் மாவட்ட கலெக்டர் கற்பகம் வெளியிட்டுள்ள செய்திக்குறிப்பில் தெரிவித்திருப்பதாவது:

உலகப்பொதுமறையாம் திருக்குறளில் உள்ள கருத்துக்களைப் பள்ளி மாணவர்கள் இளம் வயதிலேயே அறிந்து கொண்டு, கல்வியறிவோடு நல்லொழுக்கம் மிக்கவர்களாக விளங்கும் வகையில் தமிழக அரசால் “திருக்குறள் முற்றோதல் பாராட்டுப் பரிசு திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றது.

1330 குறட்பாக்களையும் மனனம் செய்து ஒப்புவிக்கும் மாணவ மாணவிகளுக்கு தலா ரூ.15,000 ரொக்கப்பரிசாக தமிழ் வளர்ச்சித்துறையால் ஆண்டுதோறும் வழங்கப்பட்டு வருகிறது.

2023-24ம் ஆண்டில் இந்தத் திட்டத்தின் கீழ் போட்டியில் பங்கேற்கும் மாணவர்கள் 1330 குறட்பாக்களையும் ஒப்புவிக்கும் திறன் கொண்ட மாணவர்களாக இருக்க வேண்டும். இயல் எண், அதிகாரம் எண், குறள் எண், போன்றவற்றை தெரிவித்தால் அதற்கான திருக்குறளை சொல்லும் திறன் பெற்றவராக இருக்க வேண்டும்.

திருக்குறளின் அடைமொழிகள், சிறப்புகள், சிறப்புப்பெயர்கள் போன்றவற்றையும் அறிந்திருக்க வேண்டும். திருக்குறளின் பொருளை அறிந்திருந்தால் கூடுதல் தகுதியாக கருதப்படும். பெரம்பலூர் மாவட்டத்தில் 1330 குறட்பாக்களையும் மனனம் செய்து ஒப்பிக்கும் திறன் பெற்ற பள்ளி மாணவ, மாணவியர் இருப்பின் இப்போட்டியில் பங்கேற்கலாம். ஏற்கனவே இந்தப் போட்டியில் பரிசு பெற்றவர்கள் மீண்டும் இந்தப் போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது.

போட்டியில் கலந்து கொள்ள விரும்பும் மாணவர்கள், பெரம்பலூர் மாவட்ட கலெக்டர் அலுவலக வளாகத்தில் உள்ள தமிழ் வளர்ச்சித் துறை உதவி இயக்குநர் அலுவலகத்தில் விண்ணப்பம் பெறலாம் அல்லது (< *https://www.tamilvalarchithurai.tn.gov.in/* >) என்ற தமிழ் வளர்ச்சித் துறையின் வலைதளத்தில் இலவசமாக பதிவிறக்கம் செய்து கொண்டு வரும் நவ.30ம்தேதி மாலைக்குள் விண்ணப்பம் அளிக்க வேண்டும். இது குறித்த மேலும் விவரங்களுக்கு 04328-225988 என்ற தொலைபேசி எண்ணில் தொடர்பு கொண்டு பயன் பெறலாம்.

இவ்வாறு அவர் அதில் தெரிவித்துள்ளார்.

அக்டோபர் : 21-10-2023 நமது பெரம்பலூர் 4



## அகூர் அரசு பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கும் நிகழ்வு

**உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் நடைபெற்றது**

குன்னம் அருகே அகூர் அரசு உயர்நிலைப்பள்ளியில் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக அரசு பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கும் நிகழ்வு நடைபெற்றது.

உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக அரசு பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கும் நிகழ்வு தமிழ்நாடு முழுவதும் உள்ள அனைத்து மாவட்டங்களுக்கும் மேலும் புதுச்சேரி யூனியன் பிரதேசம் உள்ளிட்ட பகுதிகளுக்கு திருக்குறள் நூல்கள் மாணவர்களுக்கு கட்டணம் இல்லாமல் வழங்கி வருகிறது.

இவ்வாண்டு மாவட்டத்திற்கு 2000 நூல்கள் விதம் இயன்றவரை அரசு பள்ளி மாணவர்களுக்கு வழங்க முடிவெடுத்துள்ளது.

இந்த நிலையில் பெரம்பலூர் மாவட்டம் குன்னம் வட்டம் அகூர் அரசு உயர்நிலைப்பள்ளியில் தலைமை ஆசிரியர் ப.அன்பழகன் தலைமையில், வேப்பூர் ஒன்றிய பெருந்தலைவர் பிரபா செல்லப்பிள்ளை அவர்களால் திருக்குற நூல்கள் மாணவர்களுக்கு வழங்கப்பட்டு தொடங்கி வைக்கப்பட்டது.

உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக அதன் பொறுப்பாளர் இரமேஷ் கருப்பையா திருக்குறள் குறித்த சிறப்புகளை மாணவர்களிடையே உரையாற்றினார். இந்த நிகழ்வில் மாணவர்கள் மற்றும் ஆசிரியர்கள் கலந்து கொண்டனர்.













அரசு உயர்நிலைப் பள்ளி எழுமூர்



## திருவள்ளூர் மாவட்டம்






Dinakaran

கலைஞரின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு

### தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் ஆட்சிமொழி பயிலரங்கம்

ஆட்சிமொழிப் பயிலரங்கில் தலைமையாசிரியர்களுக்கு திருக்குறள் புத்தகங்களை மாவட்ட வருவாய் அலுவலர் ராஜ்குமார் வழங்கினார். அருகில் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அன்பரசி, கல்லூரி முதல்வர் தில்லைநாயகி.

திருவள்ளூர், அக். 14: திருவள்ளூர் மாவட்ட தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் முத்தமிழறிஞர் கலைஞரின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு பொன்னேரி, உலகநாத நாராயணசாமி அரசினர் கல்லூரியில் ஆட்சிமொழிப் பயிலரங்கம், கருத்தரங்கம் நடைபெற்றன.

இப்பயிலரங்கினை கல்லூரி முதல்வர் தில்லைநாயகி தலைமை தாங்கி தொடங்கி வைத்தார். முத்தமிழறிஞர் கலைஞர் நிகழ்த்திய செம்மொழிச் செயற்பாடுகள் என்ற தலைப்பில் கும்மிடிப்பூண்டி, பெருவாயல், டிஜெஎஸ் கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் முதல்வர் லட்சுமிபதி சிறப்புரை ஆற்றினார். இதனைத் தொடர்ந்து ஆட்சிமொழி வரலாறு, சட்டம், அரசாணைகள் என்ற தலைப்பில் பொன்னேரி, உலகநாத நாராயணசாமி அரசினர் கல்லூரியின் இணைப்பேராசிரியர் சிவ. முருகேசன், அலுவலகக் குறிப்புகள், வரைவுகள், செயல்முறை ஆணைகள் அணியம் செய்தல் மற்றும் ஆய்வும் குறைகளைவு நடவடிக்கைகளும் என்ற தலைப்பில் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அன்பரசி பயிற்சியளித்தார்.

இரண்டாம் நாள் முத்தமிழறிஞர் கலைஞரின் சமுதாயச் சிந்தனைகள் என்ற தலைப்பில் பொன்னேரி, உலகநாத நாராயணசாமி அரசினர் கல்லூரியின் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் தேவராஜ் சிறப்புரையாற்றினார். மொழிப்பயிற்சி, மொழிபெயர்ப்பு, கலைச் சொல்லாக்கம் என்ற தலைப்பில் பட்டாபிராம், தருமமூர்த்தி இராவ் பகதூர் கலவலக்கண்ணன் செட்டி இந்துக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முருகேசன், கணினித் தமிழ் என்ற தலைப்பில் காட்டாங்குளத்தூர், எஸ் ஆர் எம் வள்ளியம்மை பொறியியல் கல்லூரியின் உதவிப் பேராசிரியர் சண்முகம் ஆகியோர் மின்காட்சியுரை மூலம் பயிற்சியளித்தனர்.

இந்த நிகழ்ச்சியில் மாவட்ட வருவாய் அலுவலர் ராஜ்குமார் தமிழ்மன்ற போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசுத் தொகைகளுக்குரிய காசோலைகளும், பாராட்டுச் சான்றிதழ்களும் வழங்கி வாழ்த்தினார். உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருவள்ளூர் மாவட்ட நிருவாகி தன்னார்வலர் வி.மகேந்திரனின் நற்பணியினால் பொன்னேரி கல்வி மாவட்டத்திலுள்ள பள்ளிகளிலிருந்து 12 தலைமை ஆசிரியர்களுக்கு அவரவர் பள்ளி மாணவர்களிடையே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்க ஊக்குவிக்கும் விதமாக தலா 100 திருக்குறள் நூல்கள் மாவட்ட வருவாய் அலுவலர் ராஜ்குமார் வழங்கி சிறப்பித்தார். மேலும், கருத்தரங்கத்தில் முத்தமிழறிஞர் கலைஞரின் சொற்பொழிவுகள், காணொலி காட்சி வாயிலாக காட்சிப்படுத்தப் பெற்றன.

# கடலூர் மாவட்டம்

பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா தொடர்பில் கடலூர் மாவட்டத்திலுள்ள பள்ளி, கல்லூரிகளில் பயிலும் மாணவர்களுக்கு 17.10.2023 அன்று பேச்சுப்போட்டிகள் நடத்தப்பெற்றன.

இப்போட்டிகளில் கலந்துகொண்டு வெற்றிபெற்ற பள்ளி/கல்லூரி மாணவர்களுக்கு மாவட்ட அளவில் முதல் பரிசு ரூ.5000/-, இரண்டாம் பரிசு ரூ.3000/-, மூன்றாம் பரிசு ரூ.2000/- வழங்கப்பெற்றன. மேலும், அரசுப் பள்ளி மாணவர்கள் இரண்டுபேரைத் தனியாகத் தெரிவுசெய்து ஒவ்வொருவருக்கும் சிறப்புப் பரிசுத்தொகை ரூ.2000/-வீதம் மொத்தம் ரூ.24,000/-தொகைக்கான காசோலைகளும் பாராட்டுச் சான்றிதழ்களும் மாவட்ட ஆட்சியர் மருத்துவர் அ.அருண்தம்புராஜ் இ.ஆ.ப., அவர்களால் வழங்கப்பெற்றன. அதனைத் தொடர்ந்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் 20 அரசு நடுநிலை/உயர்நிலை/மேல்நிலை பள்ளிகளுக்குத் தலா 50 திருக்குறள் நூல்களை மாவட்ட ஆட்சியர் வழங்கினார். உலகத் திருக்குறள் பேரவைத் தலைவர் திரு. பா.மோ.பாஸ்கரன், முதன்மை கல்வி அலுவலர் திரு.க.பழனி, விருத்தாசலம் மாவட்டக் கல்வி அலுவலர் (இடைநிலை) திரு.அ.துரைபாண்டியன் நேர்முக உதவியாளர்(இடைநிலை), திரு.இரா.தியாகராஜன் ஆகியோர் உடனிருந்தனர். இந்நிகழ்ச்சியைத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் முனைவர் இரா.அன்பரசி சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார். தமிழ் வளர்ச்சி பணியாளர்கள் உடனிருந்தார்கள்.









கடலூரில் நடைபெற்ற பேரறிஞர் அண்ணா பேச்சுப்போட்டியில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுடன் மாவட்ட ஆட்சியர் அருண் தம்புராஜ்.

**கடலூரில் அண்ணா பிறந்தநாள் பேச்சுப் போட்டியில் வென்றவர்களுக்கு பரிசு**

கடலூர்

கடலூர் மாவட்டத்தில் உள்ள பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு, நேற்று முன்தினம் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் பேச்சுப்போட்டிகள் நடைபெற்றன.

மாவட்ட அளவிலான இப்போட்டிகளில் வெற்றி பெற்ற பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு முதல் பரிசாக தலா ரூ.5,000 வழங்கப்பட்டது. இரண்டாம் பரிசாக தலா ரூ.3,000, மூன்றாம் பரிசாக தலா ரூ.2,000 வழங்கப்பட்டன. மேலும் அரசுப் பள்ளி மாணவர்கள் இருவருக்கு சிறப்புப் பரிசாக தலா ரூ.2, 000 வழங்கப்பட்டன. இதற்கான காசோலைகள் மற்றும் பாராட்டுச் சான்றிதழ்களை மாவட்ட ஆட்சியர் அருண் தம்புராஜ் மாணவ, மாணவிகளுக்கு வழங்கினார்.

இதேபோல் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் 20 அரசு நடுநிலை, உயர்நிலை, மேல்நிலை பள்ளிகளுக்குத் தலா 50 திருக்குறள் நூல்களையும் அவர் வழங்கினார். தமிழ் வளர்ச்சித் துறை உதவி இயக்குநர் அன்பரசி உள்ளிட்டோர் உடனிருந்தனர்.



நகரம்

பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு கடலூர் கலெக்டர் பரிசு மற்றும் சான்றிதழ்களை வழங்கி பாராட்டினார்.

**அண்ணா பிறந்தநாள் விழா**

**பேச்சு போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு பரிசு, சான்றிதழ்**

**கடலூர் கலெக்டர் வழங்கினார்**

கடலூர், அக்.18—

அண்ணா பிறந்தநாள் விழாவை முன்னிட்டு கடலூர் மாவட்டத்திலுள்ள ...

2 பேர் தேர்வு செய்யப்பட்டு ஒவ்வொருவருக்கும் சிறப்புப் பரிசுத்தொகை ரூ.2 ஆயிரமும், பாராட்டுச் சான்றிதழ்களையும் கலெக்டர் அருண்தம்புராஜ் வழங்கினார்.

அதனைத் தொடர்ந்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் 20 அரசு நடுநிலை, உயர்நிலை மேல்நிலை பள்ளிகளுக்குத் தலா 50 திருக்குறள் நூல்களை வழங்கினார். இதில் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அன்பரசி மற்றும் தமிழ் வளர்ச்சி பணியாளர்கள் உடனிருந்தனர்.

## சுப்பிரமணியபுரம் ஸ்ரீராமலிங்கர் உயர்நிலைப் பள்ளியில் திருக்குறள் திருவிழா மற்றும் பெண்கள் பாதுகாப்பு விழிப்புணர்வு நிகழ்ச்சி.

சுப்பிரமணியபுரம் ஸ்ரீ ராமலிங்கர் உயர்நிலைப் பள்ளியில் இன்று திருக்குறள் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது பள்ளியின் தலைமை ஆசிரியர் திருமதி வள்ளி அவர்கள் விழாவை தலைமையேற்று நடத்தினார் இதில் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சியும் மாணவர்களிடையே திருக்குறள் ஒப்பித்தல் போட்டிகளும் நடத்தப்பட்டது உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு பா மொ பாஸ்கரன் அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டு சிறப்பித்தார் தமிழாசிரியர் திரு சக்திவேல் அவர்கள் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளை தேர்வு செய்தார் உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு பா மொ பாஸ்கரன் அவர்கள் சான்றிதழ் மற்றும் திருக்குறள் புத்தகங்களை வழங்கி பாராட்டி பேசினார் உலக திருக்குறள் பேரவை செயலாளர் ஆசிரியர் சீஅருள்ஜோதி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார் திருக்குறள் தொடர்பான வினாடி வினா நிகழ்ச்சியும் நடத்தப்பட்டது விழா நிகழ்ச்சிகளையும் போட்டிகளையும் சிறப்பாக நடத்தியமைக்காக பள்ளிக்கு நினைவு கேடயம் வழங்கப்பட்டது பெருவாரியான மாணவர்களும் பெற்றோர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர் இறுதியில் மாணவர் நன்றி கூற விழா இனிது முடிந்தது.







# பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம் அளிப்பு

**திருப்பத்தூர், அக். 18:** திருப்பத்தூரில் பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம் அளிக்கப்பட்டது.

சென்னை உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் மற்றும் திருப்பத்தூர் மாவட்ட திருக்குறள் மன்றம் சார்பில், பள்ளி மாணவர்களுக்கு 1,330 திருக்குறள் ஒப்பிக்கும் போட்டி நடைபெற உள்ளது.



திருக்குறள் புத்தகம் பெற்றுக் கொண்ட மாணவர்களுடன், ஆசிரியர்கள்.

இதையொட்டி, நடுநிலை, உயர்நிலை, மேல்நிலை வகுப்பு படிக்கும் 24 பள்ளிகளைச் சேர்ந்த 600 மாணவ-மாணவிகளுக்கு இலவசமாக திருக்குறள் புத்தகங்கள் வழங்கும் நிகழ்ச்சி திருப்பத்தூர் மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலகத்தில் புதன்கிழமை நடைபெற்றது. நிகழ்ச்சியில், பள்ளிகளின் தலைமை ஆசிரியர்கள், ஆசிரியர்கள், கல்வி அதிகாரிகள், மாணவர்கள் கலந்து கொண்டனர். ஏற்பாட்டை திருப்பத்தூர் மாவட்ட திருக்குறள் மன்ற நிறுவனத் தலைவர் பி.ஆர்.தேவராசன் செய்திருந்தார்.





## திருப்பூர் மாவட்டம்

திருக்குறள் முற்றோதல் போட்டி: மாணவர்கள் விண்ணப்பிக்கலாம்

உடுமலை திருக்குறளில் உள்ள, 1,330 குறட்பாக்களையும் ஒப்புவிக்கும் திறன் பெற்ற பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியருக்கு தமிழ் வளர்ச்சித்துறை சார்பில், 15ஆயிரம் ரூபாய் பரிசுத்தொகை, பாராட்டுச்சான்றிதழ் ஆண்டுதோறும் வழங்கப்படுகிறது. நடப்பு, 2023- 24ம் ஆண்டில், குறள் முற்றோதல் போட்டிக்கு, மாணவ, மாணவியர் விண்ணப்பிக்கலாம்.

## செங்கல்பட்டு மாவட்டம்

19.10.2023 அன்று கேளம்பாக்கம் அரசு ஆண்கள் மேல்நிலைப் பள்ளியில் தலைமைப் பயிற்சியாளர் திரு. க.கோ. பழனி அவர்கள் திருக்குறள் நூல்களை வழங்கினார்












கேளம்பாக்கம் அரசினர் பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் தலைமைப் பயிற்சியாளர் திரு. க.கோ. பழனி அவர்கள் திருக்குறள் நூல்களை வழங்கினார்






## புதுக்கோட்டை மாவட்டம்

**21.10.2023** அன்று உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் - உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக, அம்பிகா அறக்கட்டளை நிர்வாக இயக்குனர் திருமதி சந்திரா ரவீந்திரன் அவர்கள் திருமயம் ஒன்றியத்தில் உள்ள நடுநிலைப் பள்ளிகளில் கல்வி பயிலும் ஏழாம் வகுப்பு மாணவர்களுக்கு திருக்குறள் நூல்களை பள்ளி தலைமை ஆசிரியர்களிடம் வழங்கிய நிகழ்வு.










புதுக்கோட்டை காந்தி நகர் அரசினர் உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் - உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக, உலக பொதுமறை திருக்குறள் புத்தகம் அம்பிகா கல்வி அறக்கட்டளை இயக்குநர் திருமதி சந்திரா ரவிந்திரன் அவர்களால் வழங்கப்பட்டது, இந்நிகழ்வில் பள்ளியின் தலைமை ஆசிரியர் முத்துக்குமார், மற்றும் ஆசிரியர்கள், சமூக ஆர்வலர்கள் வழக்கறிஞர் ஜெகன் ஜி, இதயம் முரளி, பள்ளி மாணவ மாணவியர்கள் கலந்து கொண்டனர்.





புதுக்கோட்டை ராணியார் அரசினர் மகளிர் மேல்நிலைப்பள்ளி

## கோயம்புத்தூர் மாவட்டம்

### திருக்குறள் முற்றோதல் போட்டி மாணவர்கள் விண்ணப்பிக்கலாம்

**கோவை, அக். 12–** உலகப் பொது மறையான திருக்குறளில் உள்ள, 1,330 குறள்களையும் மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும் திறன் பெற்ற பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியருக்கு, தமிழ் வளர்ச்சித்துறையால் ரூ.15 ஆயிரம் பரிசுத் தொகை, பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்படுகிறது. இத்திட்டத்தில் பங்கேற்க, மாணவ, மாணவியரிடம் இருந்து விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

முற்றோதலில் பங்கேற்கும் மாணவ, மாணவியர், 1,330 திருக்குறளையும் ஒப்புவிக்கும் திறன் பெற்றவர்களாக இருக்க வேண்டும். திருக்குறளில் உள்ள இயல் எண், அதிகாரம், குறள் எண், குறளின் பொருள், திருக்குறளின் அடைமொழி, சிறப்புகள், சிறப்பு பெயர்கள், உரை எழுதியோர் போன்றவற்றை அறிந்திருந்தால், கூடுதல் தகுதியாக கருதப்படும்.

திறனறி குழு முன்னிலையில் நேராய்வுக்கு உட்படுத்தப்பட்டு, பரிசுக்குரியோர் பட்டியல், சென்னை தமிழ் வளர்ச்சித்துறை இயக்குனருக்கு, கோவை மாவட்ட துணை இயக்குனரால் பரிந்துரைக்கப்படும். ஏற்கனவே பங்கேற்று பரிசு பெற்றவர்கள், மீண்டும் பங்கேற்க முடியாது.

திருக்குறள் முற்றோதல் விண்ணப்பங்களை, கோவை மாவட்ட தமிழ் வளர்ச்சி துறை துணை இயக்குனர் அலுவலகத்தில் நேரிலோ அல்லது, www.tamilvalarchithurai.tn.gov.in என்ற இணைய தளத்தில் பதிவிறக்கமோ செய்து கொள்ளலாம்.

விபரங்களுக்கு, 0422 – 2300 718 என்ற எண்ணுக்கு அழைக்கலாம். பூர்த்தி செய்த விண்ணப்பத்தை, டிச., 15க்குள் அனுப்ப, கலெக்டர் கிராந்திகுமார் அறிவுறுத்தியுள்ளார்.

# திருநெல்வேலி மாவட்டம்

உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் - உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக மூலைக்கரைபட்டி அரசு மேல்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு 25 திருக்குறள் புத்தகங்கள் வழங்கப்பட்டன...



அரசு மேல்நிலைப்பள்ளி, வடக்கு அரியநாயகிபுரம் மாணவர்களுக்கு 21 திருக்குறள் புத்தகங்கள் வழங்கப்பட்டது. மேலும் திருநெல்வேலி ஊராட்சி ஒன்றிய பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.





# புதுச்சேரி

22.10.2023 அன்று உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் - உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக பூரணங்குப்பத்தில் சிறப்பு வழிபாடு நடத்தபட்டு 60 திருக்குறள் புத்தகங்கள் வழங்கபட்டன.







http://www.maalaimalar.com

Regd. No.PY/59/2021-23 RNI. No.40735/82

மாலை மலர்

இந்தியாவின் No.1 மாலை நாளிதழ்

MAALAI MALAR

புதுச்சேரி 15-10-2023 (ஞாயிற்றுக்கிழமை) 8 பக்கம் ₹ 5 ★★★ | மலர் 46 இதழ் 304

PUDUCHERRY 15-10-2023 (SUNDAY) 8 PAGES ₹5 | VOL: 46 ISSUE: 304

உலக தமிழ் வளர்ச்சி மன்றம் சார்பில்

## திருக்குறள் முற்றோதல் பயிற்சி தொடக்க விழா

பாகூர், அக்.15—

உலக தமிழ் வளர்ச்சி மன்றம், உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஆகியவை இணைந்து அரசுப் பள்ளி மாணவர்களுக்கு இலவச திருக்குறள் புத்தகம் வழங்கி, முற்றோதல் பயிற்சி தொடக்க விழா இன்று பூரணாங்குப்பத்தில் நடந்தது. இதில் அரசுப் பள்ளியில் 3–ம் வகுப்பு முதல் 8 ஆம் வகுப்பு வரை பயிலும் மாணவர்கள் பங்கு பெற்றனர். இதனை தொடர்ந்து வருகின்ற ஞாயிற்றுக்கிழமை தோறும் 10 மணி முதல் 12 மணி வரை பூரணாங்குப்பத்தில் உள்ள திரவுபதி அம்மன் கோவில் வளாகத்தில் நடைபெறுகிறது.

இதற்கான தொடக்க விழா இன்று காலை பூஜையுடன் தொடங்கியது. இதில் முன்னாள் ராணுவவீரர் நந்தா தலைமை தாங்கி தொடங்கி வைத்தார். கோவில் நிர்வாக அதிகாரி பாஸ்கரன், ஊர் பிரமுகர்கள் புருஷோத்தமன், ஜெயபால், வெங்கடேசன், கார்த்தி, மதி கண்ணபிரான் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

உலக திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சியாளர் சங்கீதா கண்ணன் இந்த பயிற்சி வகுப்பை நடத்தி வருகின்றார். இதில் ஸ்டாலின், மோகன், மணி, தளிர் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர்.

விடுமுறை நாட்களில் மாணவர்கள் செல்போனில் தங்களை ஈடுபடுத்தி வருகின்றனர்.

அதிலிருந்து அவர்களை வெளி கொண்டு வரும் விதமாக இந்த விழிப்புணர்வு முற்றோதல் வகுப்புகள் நடைபெற்று வருவதாகவும் தெரிவித்தனர். இன்று அப்துல்கலாமின் பிறந்த நாள் விழாவினை முன்னிட்டு இந்த வகுப்புகள் தொடங்கியதாகவும் அவர் கூறினர்.

திருக்குறள் முற்றோதல் தொடக்க நிகழ்ச்சியில் சங்கீதா கண்ணன் பயிற்சி வகுப்பை நடத்திய காட்சி.

திரு.வி.க. அரசு ஆண்கள் உயர்நிலைப் பள்ளி, வீரமாமுனிவர் அரசு ஆண்கள் உயர்நிலைப்பள்ளி என இரண்டு பள்ளிகளுக்குச் சென்று திருக்குறள் அறிமுக உரை கொடுத்து, முற்றோதல் பயிற்சி பற்றிய விவரங்களையும் வழங்கினேன். ஆர்வமுள்ள மாணவர்கள் இன்றே பயிற்சியில் இணைந்துள்ளனர். இரு பள்ளிகளுக்கும் சேர்த்து 16 புத்தகங்கள் வழங்கப்பட்டுள்ளது.





# தூத்துக்குடி மாவட்டம்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் ஒருங்கிணைப்பில் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் வழங்கும்.திருக்குறள் புத்தகங்கள்கழுகுமலை திருவள்ளுவர் கழகம் சார்பில் அரசு மேல்நிலைப் பள்ளியில் ஆறாம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை முதல் மூன்று இடங்களில் மதிப்பெண் பெற்றவர்களுக்குதிருக்குறள் புத்தகங்கள் கோவில்பட்டி லட்சுமி அம்மாள் பாலிடெக்னிக் கல்லூர இயந்திரவியல்துறை முதுநிலை விரிவுரையாளர் ச.குமார முருகன் மூலமாக வழங்க பட்டது.




# வேலூர் மாவட்டம்

## உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் மற்றும் திருவள்ளுவர் சேவா சங்கம் இணைந்து இலவச திருக்குறள் நூல் வழங்கும் விழா.

வேலூர் ஓல்டு டவுனில் உள்ள RCM உத்திரமாதா நடுநிலைப் பள்ளியில் 100 மாணாக்கர்களுக்கு மாலை 3 மணி அளவில் இலவசமாக திருக்குறள் நூல் வழங்கும் விழா நடை பெற்றது. கடவுள் வாழ்த்து திருக்குறள் பாடப்பட்டது. திருக்குறள் மாமுனி முனைவர் ச.ஸ்ரீதர் நிறுவனத் தலைவர் வரவேற்புரை வழங்கினார். பொருளாளர் அ.பாஸ்கரன் தலைமைத் தாங்கி திருக்குறள் பற்றி பேசி மாணவர்களுக்கு திருக்குறள் நூல் வழங்கினார். உதவி ஆய்வாளர் பிரம்மஞான சங்கம் செயலாளர் மு.நரசிம்மன் சிறப்புரை ஆற்றினார். தலைமை ஆசிரியர் ஜோகன்னா உதவி தலைமை ஆசிரியர் சார்லஸ் ஆரோக்கியராஜ் வாழ்த்துரை வழங்கினார். ஜோதிராமலிங்கம் உதவி கோட்ட பொறியாளர் ஓய்வு பாராட்டுரை வழங்கினார். பொருளாளர் அ.பாஸ்கரன் அவர்களுக்கு மு.நரசிம்மன் சால்வை அணிவித்து சிறப்பு செய்தார்.

செயலாளர் த.அண்ணாமலை தலைமை ஆசிரியர் அவர்களுக்கு சிறப்பு செய்தார். திருக்குறள் மாமுனி ச.ஶ்ரீதர் அவர்களுக்கு ஜோதிராமலிங்கம் சிறப்பு செய்தார். நிறுவனர் ச.ஶ்ரீதர் செயலாளர் அண்ணாமலைக்கு சிறப்பு செய்தார். விழாவில் ஆசிரியர்கள் மாணவர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர். வெங்கடேசன் நன்றி கூறினார் முடிவில் நாட்டுப்பண் பாடப்பட்டது.










# கள்ளக்குறிச்சி மாவட்டம்

கலைஞர் 100 1924 - 2023

**கள்ளக்குறிச்சி மாவட்டம்**

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில்**
**அரசு பள்ளி மாணவர்களுக்கு**

**இலவச திருக்குறள் நூல் வழங்கும் விழா**

நிகழ்ச்சி நிரல்

நாள் : 30-10-2023 திங்கட்கிழமை காலை 10.00 மணியளவில்

இடம் : மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலக கூட்டரங்கம், கள்ளக்குறிச்சி.

தமிழ்த்தாய் வாழ்த்து :

வரவேற்புரை : திருமதி.**கோ.கிருஷ்ணப்பிரியா,** அவர்கள்,
முதன்மைக் கல்வி அலுவலர், கள்ளக்குறிச்சி.

முன்னிலை : திரு.**நா.சத்தியநாராயணன்,** அவர்கள்,
மாவட்ட வருவாய் அலுவலர், கள்ளக்குறிச்சி.

தலைமையேற்று அரசு பள்ளி மாணவர்களுக்கு
இலவச திருக்குறள் நூல் வழங்குபவர் :

திரு.**ஷ்ரவன்குமார்,** இ.ஆ.ப. அவர்கள்,
மாவட்ட ஆட்சித் தலைவர், கள்ளக்குறிச்சி.

மருத்துவர்.**வே.உதயகுமார்** அவர்கள்,
மேனாள் இணை இயக்குநர் (நலப்பணிகள்)

பாவலர்.**இரா.துரைமுருகன்** அவர்கள்,
தலைவர்,தியாகதுருகம்பாரதியார் தமிழ்ச்சங்கம்.

திரு.**மு.பி.பாசுகரன்(எ)பூங்குன்றன்** அவர்கள்,
தலைவர், சின்னசேலம் திருக்குறள் பேரவை.

திரு.**தி.கிருட்டிணசாமி** அவர்கள்,
மேனாள் இணை ஆட்சியர், கள்ளக்குறிச்சி.

நன்றியுரை : புலவர்.**அய்யா மோகன்,** அவர்கள்,
மாவட்டத் தொடர்பாளர், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்.
கள்ளக்குறிச்சி மாவட்டம்.

நாட்டுப்பண் :










## உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் பள்ளி மாணவர்களுக்கு இலவச திருக்குறள் புத்தகங்கள்

### கள்ளக்குறிச்சி கலெக்டர் ஷ்ரவன்குமார் வழங்கினார்

**கள்ளக்குறிச்சி, அக்.31-** கள்ளக்குறிச்சி மாவட்ட கலெக்டர் அலுவலக கூட்டரங்கில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் மாவட்ட கலெக்டர் ஷ்ரவன்குமார் அரசு பள்ளி மாணவர்களுக்கு இலவச திருக்குறள் புத்தகங்களை வழங்கினார்.

திருக்குறளின் முக்கியத்துவத்தை கருத்தில் கொண்டு, 1,330 திருக்குறளை மனப்பாடமாக கூறும் மாணவர்களுக்கு 2000 ஆண்டு முதல் தமிழக அரசு பரிசுத்தொகையும், சான்றிதழ்களையும் வழங்கி வருகிறது.

உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் என்ற அமைப்பு தமிழ்நாட்டில் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் 5 ஆண்டுகளுக்கு 2,000 திருக்குறள் புத்தகங்களை விலையில்லாமல் வழங்க முன்வந்துள்ளது. அதன்படி கள்ளக்குறிச்சி மாவட்டத்தில் உள்ள அரசு பள்ளி மாணவ, மாணவிகளுக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள் புத்தகங்களை மாவட்ட கலெக்டர் வழங்கினார்.

இலவச திருக்குறள் புத்தகம் அரசு மகளிர் மேல்நிலைப்பள்ளி கள்ளக்குறிச்சி, அரசு ஆண்கள் மேல்நிலைப்பள்ளி கள்ளக்குறிச்சி, அரசு மகளிர் மேல்நிலைப்பள்ளி சின்னசேலம், அரசு ஆண்கள் மேல்நிலைப்பள்ளி சின்னசேலம், பெரிய சிறுவத்தூர் மேல்நிலைப் பள்ளி, பெரிய சிறுவத்தூர் மாதிரி பள்ளி, தாகம்தீர்த்தாபுரம் மேல்நிலைப்பள்ளி, நயினார்பாளையம் மேல்நிலைப் பள்ளி, அரங்கநாத புரம் உயர்நிலைப்பள்ளி, மூரார்பாது மகளிர் உயர்நிலைப்பள்ளி, சேஷசமுத்திரம் உயர்நிலைப்பள்ளி, சித்தால் அரசு மாதிரிப் பள்ளி, சித்தேரிப்பட்டு அரசு மேல்நலைப்பள்ளி, ஏமப்போர் உயர்நிலைப்பள்ளி என மொத்தம் 15 அரசு பள்ளிகளுக்கு 750 திருக்குறள் புத்தகம் ரூ.7,000 மதிப்பீட்டில் வழங்கப்பட்டது.

நிகழ்ச்சியில் மாவட்ட வருவாய் அலுவலர் சத்தியநாராயணன், முன்னாள் இணை இயக்குநர் (நலப்பணிகள்) உதயகுமார், பாரதியார் தமிழ்ச்சங்கம் தலைவர் தியாகதுருகம் பாவலர் .துரைமுருகன், சின்னசேலம் திருக்குறள் பேரவை தலைவர் பாசுகரன் (எ) பூங்குன்றன், முன்னாள் துணை ஆட்சியர் கிருஷ்ணசாமி, மாவட்ட தொடர்பாளர் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் புலவர். அய்யா. மோகன், அரசு பள்ளி தலைமை ஆசிரியர்கள் மற்றும் அரசு அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

## பள்ளி மாணவர்களுக்கு 750 திருக்குறள் புத்தகங்கள்

▶ கள்ளக்குறிச்சி மாவட்ட ஆட்சியர் அலுவலக கூட்டரங்கில் அரசு பள்ளி தலைமை ஆசிரியரிடம் இலவச திருக்குறள் புத்தகங்களை மாவட்ட ஆட்சியர் ஷ்ரவன்குமார் வழங்கினார்.

### மாவட்ட ஆட்சியர் வழங்கினார்

கள்ளக்குறிச்சி, அக். 31: கள்ளக்குறிச்சி மாவட்ட ஆட்சியர் அலுவலக கூட்டரங்கில் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் வழங்கப்பட்ட இலவச திருக்குறள் புத்தகங்களை அர்சு பள்ளி மாணவர்களுக்கு மாவட்ட ஆட்சியர் ஷ்ரவன்குமார் வழங்கினார்.

திருக்குறளின் முக்கியத்துவத்தை கருத்தில் கொண்டு 1330 திருக்குறளை மனப்பாடமாக கூறும் மாணவர்களுக்கு 2000ம் ஆண்டு முதல் தமிழக அரசு பரிசுத்தொகையும், சான்றிதழ்களையும் வழங்கி வருகிறது. உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் என்ற அமைப்பு தமிழ்நாட்டில் ஒவ்வொரு மாவட்டத்துக்கும் 5 ஆண்டுகளுக்கு 2000 திருக்குறள் புத்தகங்களை விலையில்லாமல் வழங்க முன்வந்துள்ளது. அதன்படி கள்ளக்குறிச்சி மாவட்டத்தில் உள்ள அரசு பள்ளி மாணவியர்களுக்கு உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள் புத்தகங்களை ஆட்சியர் வழங்கினார்.

இலவச திருக்குறள் புத்தகமானது கள்ளக்குறிச்சி அரசு ஆண்கள் மற்றும் பெண்கள் மேல்நிலைப் பள்ளி, சின்னசேலம் அரசு ஆண்கள் மற்றும் பெண்கள் மேல்நிலைப்பள்ளி, பெரியசிறுவத்தூர் மேல்நிலைப்பள்ளி, பெரிய சிறுவத்தூர் மாதிரி பள்ளி, தாகம்தீர்த்தாபுரம் மேல்நிலைப்பள்ளி, நயினார்பாளையம் மேல்நிலைப் பள்ளி, அரங்கநாதபுரம் உயர்நிலைப்பள்ளி, மூரார்பாளையம் மகளிர் உயர்நிலைப்பள்ளி, சேஷசமுத்திரம் உயர்நிலைப்பள்ளி, சித்தால் அரசு மாதிரி பள்ளி, சித்தேரிப்பட்டு அரசு மேல்நிலைப்பள்ளி, ஏமப்பேர் உயர்நிலைப் பள்ளி என மொத்தம் 15 அரசு பள்ளிகளுக்கு 750 திருக்குறள் புத்தகம் ரூ.7,000 மதிப்பில் வழங்கப்பட்டது.

இந்நிகழ்வில் மாவட்ட வருவாய் அலுவலர் சத்திய நாராயணன், முன்னாள் இயக்குநர் (நலப்பணிகள்) உதயகுமார், தியாகதுருகம் பாரதியார் தமிழ்ச்சங்கம் தலைவர் துரைமுருகன், சின்னசேலம் திருக்குறள் பூங்குன்றன், முன்னாள் துணை ஆட்சியர் கிருட்டிணசாமி, மாவட்ட தொடர்பாளர் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் அய்யாமோகன் மற்றும் அரசு பள்ளி தலைமை ஆசிரியர்கள், அரசு அலுவலர்கள் ஆகியோர் உடனிருந்தனர்.

# கிருஷ்ணகிரி மாவட்டம்

கிருஷ்ணகிரி மாவட்ட பள்ளி மாணவ, மாணவிகளுக்கான திறக்குறள் முற்றோதல் போட்டிக்கு விண்ணப்பிக்க அக். 30-ஆம் தேதி கடைசி நாளாகும்.

இது குறித்து கிருஷ்ணகிரி மாவட்ட ஆட்சியர் கே.எம்.சரயு, புதன்கிழமை வெளியிட்ட செய்திக் குறிப்பு:

இலங்கியங்களில் அனைத்திலும் சிறந்ததும், உன்னதமானதும், மனிதகுல அனைத்துக்குமாக உதித்த மேலானதும் ஆகிய தன்னிகரற்ற படைப்பு திறக்குறள். அத்தகைய சிறப்புமிக்க திருக்குறட்பாக்களை மாணவர்கள் இளம்வயதிலேயே கற்றுத்தெரிதல் பசுமரத்தாணிபோல் பதிந்து, நெஞ்சில் நிலைத்து அவர்களது வாழ்க்கைக்கு வழிகாட்டும்; தாம் பெறுகின்ற கல்வியறிவோடு, நல்லொழுக்கமிக்கவர்களாக மாணவர்கள் உருவாக வழிவகுக்கும். தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் 1330 திருக்குறட்பாக்களையும் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்கு 2021-ஆம் ஆண்டு முதல் பரிசுத் தொகை ரூ. 10 ஆயிரத்திலிருந்து ரூ. 15 ஆயிரமாக உயர்த்தி, பாராட்டுச் சான்றிதழும் வழங்கி சிறப்பிக்கப் பெறுகின்றனர்.

திறக்குறள் முற்றோதல் போட்டிக்கு கலந்துகொள்ளும் மாணவர்கள், திறனறிக் குழுவினரால் திறனாய்வு செய்து, தகுதிபெற்றவர்கள் தேர்வு செய்யப் பெற்று, பரிசு பெறுவதற்கு அரசுக்குப் பரிந்துரை செய்யப்படுவர். திறக்குறள் முற்றோதல் திறனாய்வு கிருஷ்ணகிரி மாவட்ட தமிழ் வளர்ச்சித் துறை தெரிவுக்குழுவால் மேற்கொள்ளப்பெறும். தேர்வு செய்யப்பட்ட மாணவர்களுக்கு பரிசுத் தொகை ரூ. 15 ஆயிரம் மற்றும் பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்படும்.

இதில், 1330 திருக்குறட்பாக்களையும் முழுமையாக ஒப்புவிக்கும் திறன் பெற்றவராக இருத்தல் வேண்டும். இயல் எண், பெயர், அதிகாரம் எண், பெயர், குறள் எண், பெயர் போன்றவற்றை தெரிவித்தால் அதற்குரிய திருக்குறளை கூறும் திறன் பெற்றவராக இருத்தல் வேண்டும். திருக்குறளின் அடைமொழிகள், திருவள்ளுவரின் சிறப்புப் பெயர்கள், திருக்குறளின் சிறப்புகள் ஆகியவற்றை அறிந்தவராக இருத்தல் வேண்டும். கிருஷ்ணகிரி வருவாய் மாவட்டத்தில் அமைந்துள்ள பள்ளியில் பயில்பவராக இருத்தல் வேண்டும். அரசு, அரசு உதவிபெறும், தனியார் போன்ற பள்ளிகளில் 1-ஆம் வகுப்பு முதல் பிளஸ் 2 வகுப்பு வரை பயிலும் மாணவர்கள் பங்குபெறலாம். தமிழ் வளர்ச்சித் துறையால் வழங்கப்பெறும் இந்தப் பரிசை ஏற்கெனவே பெற்றவராக இருத்தல் கூடாது. திருக்குறளின் பொருளும் அறிந்திருப்பின் கூடுதல் தகுதியாகக் கருதப்பெறும்.

மேற்குறிப்பிட்டவாறு திருக்குறள் முற்றோதும் திறன்படைத்த மாணவர்கள் தமிழ் வளர்ச்சித் துறையின் வலைதள முகவரியில் விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பங்களை கிருஷ்ணகிரி மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகத்தில் முதல்தளத்தில் அமைந்துள்ள தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அலுவலகத்தில் நேரிலோ, அஞ்சல் மூலமாகவோ அக். 30-ஆம் தேதிக்குள் அளிக்கலாம் என அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## ஓசூர் திருக்குறள் முற்றோதல் பயிற்றகம் - உருவாக்கம்

கிருஷ்ணகிரி மாவட்ட ஒருங்கிணைப்பாளர் திரு. சிவகுருநாதன் (ஓசூர் பச்சையம்மன் சில்க் உரிமையாளர்) அவர்களை உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் தலைமை பயிற்சியாளர் திரு.க.கோ.பழனி அவர்கள் சந்தித்து உரையாடினார்.





**கிருஷ்ணகிரி மாவட்ட பள்ளி மாணவ, மாணவிகளுக்கான திறக்குறள்முற்றோதல் போட்டிக்கு விண்ணப்பிக்க அக். 30-ஆம் தேதி கடைசி நாளாகும்.**

# சேலம் மாவட்டம்

அக்டோபர் 11, 2023, உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் ஒருங்கிணைப்பில், உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் வழங்கும் இலவத் திருக்குறள் நூல்கள் சேலம் மாவட்டத்தில் அரசுப்பள்ளி தலைமையாசிரியர்களுக்கு வழங்கப்பட்டது. அரசு விழாவில் இடம்பெற்ற இந்த நிகழ்ச்சியில் மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் திரு.

மு.கபீர் நூல்களை தலைமையாசிரியருக்கு வழங்கினார். இதற்கான சிறப்பான ஏற்பாட்டை உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சேலம் மாவட்டத் தொடர்பாளர், திருக்குறள் புரவலர் முனைவர்.தங்கராசு பெரியசாமி நேர்த்தியாக ஒருங்கிணைத்திருந்தார்.





Z



# திருக்குறள் செய்தி..

விஜய் தணிகாசலம் கனடாவின் ஒன்ராறியோ மாகாண போக்குவரத்து இணை அமைச்சர். 22.09.2023 அன்று திருக்குறள் மீது கைவைத்து அமைச்சராக பதவியேற்றார்.






# திருக்குறள் நிகழ்வுகள்..

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்**
வழங்கும்

**அரசுப்பள்ளி மாணவர்களுக்கான இலவசத் திருக்குறள் முற்றோதல் பயிற்சி**

**திருக்குறள் முற்றோதல் தொடர் வகுப்பு**
**1000ஆவது நாள் விழா**

இணையவழிப் பயிற்சியாளர்
திருக்குறள்
திரு. க. காமராசு
தலைமைப் பயிற்சியாளர்
+91 6380 278 863

நாள் : 22-Oct-2023
ஞாயிற்றுக்கிழமை
நேரம் :6:00 AM (IST)

zoom
Meeting ID : 958 1611 4007
Passcode : 1330
LIVE
www.ValaiTamil.TV

பயிற்சி நாட்கள் - நேரம்
திங்கள் முதல் வெள்ளி வரை
நண்பகல் 1:15 மணி முதல் 1:45 வரை
நாள்தோறும்
காலை 6:00 மணி முதல் 6:45 வரை
மாலை 7:30 மணி முதல் 8:00 வரை

www.ValaiTamil.TV நேரலையில் இணைந்து பயிற்சி பெறவும், பயிற்சியாளருடன் உரையாடவும் தொழில்நுட்ப வசதி செய்யப்பட்டுள்ளது.

அரசுப்பள்ளி தலைமையாசிரியர்கள், பெற்றோர்கள், மாணவர்கள், சான்றோர்கள், திருக்குறள் ஆர்வலர்கள் கலந்து கொண்டு நிகழ்ச்சியைச் சிறப்பிக்க வேண்டுகிறோம்.

ஆதரவு அமைப்புகள்
உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம்
வலைத்தமிழ்.டிவி www.ValaiTamil.TV
வள்ளுவர் குரல் குடும்பம்
S2S டிரஸ்ட்

REGISTER TODAY www.ValaiTamil.com/Thirukkural/India/

ஒருங்கிணைப்பாளர்கள்
திட்ட ஒருங்கிணைப்பு — திரு. ச. பார்த்தசாரதி, ஆசிரியர், வலைத்தமிழ்
அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு — திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு), ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்
அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு — திரு. இரவி சொக்கலிங்கம், நிறுவனர், S2S அறக்கட்டளை
புரவலர் ஒருங்கிணைப்பு — திரு. செந்தில் துரைசாமி, திருக்குறள் ஆர்வலர், அமெரிக்கா; திரு. க.செங்குட்டுவன், திருக்குறள் ஆர்வலர், இந்தியா; திரு. கொழந்தவேல் இராமசாமி, அமெரிக்கா

தொடர்பு கொள்ள:
www.Thirukkural.ValaiTamil.com || kural.mutrothal@gmail.com || +91 73055 71897

**பிரான்சு வொரேயால்**
**தமிழ்க் கலாச்சார மன்றம்**
**பிரான்ஸ் நாட்டில்**
**திருவள்ளுவர் திருவுருவச்சிலை திறப்பு விழா**

உலகத்திற்கு அன்பையும் சமாதானத்தையும் அள்ளித்தரும் அமுதசுரபியாக விளங்கும் பொன்னாடு பிரான்ஸ். உலகெங்குமுள்ள பல்வேறு இனங்கள் நாடி வரும் சகோதரத்துவத்தின் சரணாலயமான இத்திருநாட்டில் தமிழ்வளர்ச்சி தமிழ் பண்பாட்டைப் போற்றுதல், இந்திய மரபின் மகத்துவத்தை மேம்படுத்துதல் ஆகிய நோக்கங்களுக்காகத் தோற்றுவிக்கப்பட்ட இயக்கம் தான் தமிழ்க் கலாச்சார மன்றம்.

தன் பதினெட்டு ஆண்டுக்கால வரலாற்றில் எத்தனையோ மைல்கற்களைத் தொட்டு, மேலும் பல சிகரங்களை நோக்கிப் பயணிக்கும் இம்மன்றம், இந்தியாவின் மாண்பினை உயர்த்தும் உன்னத எண்ணத்துடன் 2011-ஆம் ஆண்டு வொரெயால் நகரின் இதயப்பகுதியல் மகாத்மா காந்தியடிகளுக்குத் திருவுருச்சிலையை எழுப்பியது.

பிரான்ஸ் நாட்டிற்கு வருகை தரும் சுற்றுலாப்பயணிகள் ஈபிள் கோபுரத்திலிருந்து அழகான அனுபவத்தையும் வொரெயால் மகாத்மா காந்தியடிகள் சிலையிலிருந்து அன்பின் வலிமையையும் பெற்றுச் செல்வது இன்றைக்கு வரலாறாக மாறியுள்ளது.

அவ்வரிசையில் மற்றுமொரு மகத்தான பணியிலும் தமிழ்க்கலாச்சார மன்றம் தன்னை ஈடுபடுத்திக்கொண்டுள்ளது. அறிவார்ந்த செய்திகளாலும் மனித இனத்தின் கடமைகளைக்கூறும் அறத்தினாலும் உலகத்தின் பெருமதிப்பைப் பெற்றுள்ள **ஐயன் திருவள்ளுவருக்கு செர்ஜி நகரத்தின் மையஇடத்தில் பார்போற்றும் திருவுருவச்சிலையை அரசு அனுமதி பெற்று எதிர்வரும் 2023, டிசம்பர் 09-ந் தேதி திறக்கப்பட உள்ளது.**

தமிழுக்குப் பெருமை சேர்த்திடும் இப்பெரும் அறநூல் எல்லாக் காலத்திற்குமான செய்திகளைத் தன்னுள் தாங்கி நிற்கிறது. மதம், இனம் மற்றும் மொழிகள் கடந்து, மனிதக்குல மேம்பாட்டுக்காக இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிந்தித்த அத்தீர்க்கதரிசிக்கு ஐரோப்பியக் கண்டத்தில் சிலை அமைப்பதே பொருத்தமாகும்.

தங்கள் அனைவரின் மேலான ஒத்துழைப்புடன், முப்பாலை வடித்த திருவள்ளுவருக்கு பிரம்மாண்டமான திருவுருவச்சிலை திறப்பு விழா நடைபெற உள்ளது. அனைவரும் வருக....

நாள் : 09-12-2023 சனிக்கிழமை
நேரம் : காலை 11 மணி
இடம் : Parc Fraçois Mitterrand (Cergy préfecture)
Grand Centre de Cergy

தங்கள் அன்பான ஆதரவை எதிர்நோக்கி
**தமிழ்க் கலாச்சார மன்றம்**
43, Rue du pic vert, 95490 Vauréal, France.
association_tamoule@yahoo.fr
http://www.tamilasso.com

வாழ்த்துகிறேன்
முனைவர் கவிதை கணேசன்
பண்ருட்டி - தமிழ்நாடு
கைப்பேசி +91 70 10 250 860

# ஐரிஷ் மொழியில் திருக்குறள்

கவிஞர் காபிரியல் ரோசென்ஸ்டாக் மொழிபெயர்ப்பில் அயர்லாந்து தமிழ்க் கல்விக்கழகமும், அயர்லாந்தின் புகழ்பெற்ற டிரினிட்டி கல்லூரியின் ஐரிஷ்மொழித்துறையும் இணைந்து 2021-ஆம் ஆண்டு தொடங்கிய பணி சிறப்புற நிறைவுற்று நூல் வடிவில் வெளிவரத் தயார் நிலையில் உள்ளது...






# நவில்தொறும் நூல்நயம்

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 33
இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்
வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்
06.10.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45
நூல்–நூலாசிரியர்
'திருவள்ளுவர் இறைநெறி'
பேராசிரியர் அரங்க. இராமலிங்கம்
நூல் பற்றிய நயவுரை
முனைவர் வாணி அறிவாளன்
உதவிப்பேராசிரியர், தமிழ்மொழித் துறை
தலைவர் (பொறுப்பு), திருக்குறள் ஆய்வு மையம்
சென்னைப் பல்கலைக்கழகம்
திருவள்ளுவர் இறைநெறி
Zoom ID: 988 6476 9563
Passcode: 1330
watch on: https://www.valaitamil.tv
https://www.voiceofvalluvar.org
https://karka.in
https://www.youtube.com/ValaiTamil
https://www.valaitamil.com

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 34
இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்
வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்
13.10.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45
நூல்–நூலாசிரியர்
'வள்ளுவரும் வள்ளலாரும்'
சன்மார்க்கதேசிகன்
முனைவர் அருள்திரு ஊரன் அடிகளார்
நூல் பற்றிய நயவுரை
திரு. கோ.சக்கரபாணி
மேனாள் செயற் பொறியாளர் (BSNL)
வள்ளுவரும் வள்ளலாரும்
Zoom ID: 988 6476 9563
Passcode: 1330
watch on: https://www.valaitamil.tv
https://www.voiceofvalluvar.org
https://karka.in
https://www.youtube.com/ValaiTamil
https://www.valaitamil.com

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 35
இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்
வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்
20.10.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45
நூல்–நூலாசிரியர்
திருமேனி காரி இரத்தின கவிராயர் இயற்றிய
'நுண்பொருள் மாலை'
திருக்குறள் பரிமேலழகர் உரை விளக்கம்
பதிப்பாய்வு பேராசிரியர் இ.சுந்தரமூர்த்தி
நூல் பற்றிய நயவுரை
பேராசிரியர். கு.வெ.பாலசுப்பிரமணியன்
மேனாள் துறைத் தலைவர், இலக்கியத் துறை
தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
நுண்பொருள் மாலை
Zoom ID: 988 6476 9563
Passcode: 1330
watch on: https://www.valaitamil.tv
https://www.voiceofvalluvar.org
https://karka.in
https://www.youtube.com/ValaiTamil
https://www.valaitamil.com

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 36
இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்
வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்
27.10.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45
நூல்–நூலாசிரியர்
'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே'
'சித்தாந்த ஞானபானு'
க.வச்சிரவேல் முதலியார்
நூல் பற்றிய நயவுரை
பேராசிரியர் கோ.ம.மோகனசுந்தரம்
மேனாள் முதல்வர், கற்பகம் பொறியியல் கல்லூரி, கோவை.
(1906-1989)
திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே
க. வச்சிரவேல்
Zoom ID: 988 6476 9563
Passcode: 1330
watch on: https://www.valaitamil.tv
https://www.voiceofvalluvar.org
https://karka.in
https://www.youtube.com/ValaiTamil
https://www.valaitamil.com

# திருக்குறள் தற்சார்பு

எங்கள் மாவட்டம்-எங்கள் பொறுப்பு, எங்கள் மாவட்டப் பயிற்சியாளர், எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் முற்றோதல் செய்த ஒருவருக்கு வேலை, எங்கள் மாவட்ட அறம்சார் புரவலர் திருக்குறளுக்கு முன்வருபவரை, அவரது வணிகத்தை நாங்கள் நாங்கள் முன்னிறுத்துவோம், எங்கள் மாவட்ட மாணவர்கள் பயன்பெறுகிறார்கள், எங்கள் மாவட்ட திருக்குறள் ஆளுமைகள் வழிகாட்டுகிறார்கள், எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து அரசின் பரிசினைப் பெற அதிக மாணவர்கள் திருக்குறள் படிக்கிறார்கள், எங்கள் மாவட்டத்தில் படித்து வெளிநாடு சென்றவர்கள் எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்தவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, வெளிநாட்டு மாணவர் பயணம் என்று பலவகையில் துணைநிற்கிறார்கள்.

**திருக்குறள் புரவலராக உங்கள் மாவட்டத்தில்பொறுப்பேற்க அழைக்கிறோம்..**

**ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!**

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்திலிருந்து "திருக்குறள் புரவலர்கள்" தேவை.

| | | | |
|---|---|---|---|
| Ariyalur<br>அரியலூர்<br>Your Photo / Business Photo | Chengalpattu<br>செங்கல்பட்டு<br>**மணி பெரியகருப்பன்,**<br>Ohio, USA | Chennai<br>சென்னை<br>Your Photo / Business Photo | Coimbatore<br>கோயம்புத்தூர்<br>Your Photo / Business Photo |
| Cuddalore<br>கடலூர்<br>Your Photo / Business Photo | Dharmapuri<br>தர்மபுரி<br>Your Photo / Business Photo | Dindigul<br>திண்டுக்கல்<br>Your Photo / Business Photo | Erode<br>ஈரோடு<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Kallakurichi<br>கள்ளக்குறிச்சி<br>Your Photo / Business Photo | Kanchipuram<br>காஞ்சிபுரம்<br>Your Photo / Business Photo | Kanyakumari<br>கன்னியாகுமரி<br>Your Photo / Business Photo | Karur<br>கரூர்<br>க.செங்குட்டுவன்<br>Valluvar Science and Management College |
| Krishnagiri<br>கிருஷ்ணகிரி<br>Your Photo / Business Photo | Madurai<br>மதுரை<br>Your Photo / Business Photo | Mayiladuthurai<br>மயிலாடுதுறை<br>JENIFER SWEETS & BAKERY<br>ஜெனீபர் பவுல்ராஜ் | Nagappattinam<br>நாகப்பட்டினம்<br>Your Photo / Business Photo |
| Namakkal<br>நாமக்கல்<br>Your Photo / Business Photo | Perambalur<br>பெரம்பலூர்<br>Your Photo / Business Photo | Pudukkottai<br>புதுக்கோட்டை | Ramanathapuram<br>இராமநாதபுரம்<br>Your Photo / Business Photo |
| Ranipet<br>இராணிப்பேட்டை<br>Your Photo / Business Photo | Salem<br>சேலம்<br>முனைவர். தங்கராசு பெரியசாமி | Sivagangai<br>சிவகங்கை<br>Your Photo / Business Photo | Tenkasi<br>தென்காசி<br>Your Photo / Business Photo |
| Thanjavur<br>தஞ்சாவூர்<br>Your Photo / Business Photo | The Nilgiris<br>நீலகிரி<br>Your Photo / Business Photo | Theni<br>தேனி<br>Your Photo / Business Photo | Thirupattur<br>திருப்பத்தூர்<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Tiruvallur<br>திருவள்ளூர்<br>Your Photo / Business Photo | Tiruvannamalai<br>திருவண்ணாமலை<br>Your Photo / Business Photo | Tiruvarur<br>திருவாரூர்<br>**மருத்துவர். விஜய் ஜானகிராமன்**<br>USA | Vellore<br>வேலூர்<br>Your Photo / Business Photo |
| Viluppuram<br>விழுப்புரம்<br>Your Photo / Business Photo | Virudhunagar<br>விருதுநகர்<br>Your Photo / Business Photo | Pondicherry<br>புதுச்சேரி<br>**தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம்** | Karaikkal<br>காரைக்கால்<br>Your Photo / Business Photo |

## திருக்குறள் நூல்கள் மாவட்டங்களுக்கு *1000* நூல்கள் வரை அனுப்பப்பட்டு நிகழ்ச்சி வைத்து வழங்கப்பட்ட மாவட்டங்களின் விவரம்

| மாவட்டம் | நூல் வழங்கப்பட்டதா? | பயிற்சியாளர் |
|---|---|---|
| *Dharmapuri* தர்மபுரி | ஆம் | |
| *Tiruvallur* திருவள்ளூர் | ஆம் | |
| *Tirunelveli* திருநெல்வேலி | ஆம் | |
| *Tiruvannamalai* திருவண்ணாமலை | ஆம் | திரு .க.காமராசு |
| *Kallakurichi* கள்ளக்குறிச்சி | ஆம் | புலவர். ஐயா மோகன் |
| *Cuddalore* கடலூர் | ஆம் | |
| *Chennai* சென்னை | ஆம் | திரு. க.கோ.பழனி |
| *Dindigul* திண்டுக்கல் | ஆம் | திரு. வெ.செல்வன் |
| *Karur* கரூர் | ஆம் | |
| *Mayiladuthurai* - மயிலாடுதுறை | ஆம் | திரு. சரவணன் |
| *Thanjavur* தஞ்சாவூர் | ஆம் | திரு. கோபிசிங், திருமதி. ச.ஆனந்தி |
| *Namakkal* நாமக்கல் | ஆம் | திரு. க.காமராசு |
| *Pondicherry* - புதுச்சேரி | ஆம் | திருமதி. சங்கீதா கண்ணன் |
| *Vellore* வேலூர் | ஆம் | |
| *Viluppuram* விழுப்புரம் | ஆம் | |
| *Kanyakumari* கன்னியாகுமரி | ஆம் | கவிஞர். தமிழ்க்குழவி |
| *Tiruchirappalli* திருச்சி | ஆம் | |
| *Tenkasi* தென்காசி | ஆம் | திரு.ஶ்ரீ தர் |
| *Pudukkottai* புதுக்கோட்டை | ஆம் | திரு. தங்கமணி |
| *Salem* சேலம் | ஆம் | திரு. க.காமராசு |
| *Thirupattur* திருப்பத்தூர் | ஆம் | |
| *Perambalur* பெரம்பலூர் | ஆம் | |
| *Ariyalur* அரியலூர் | ஆம் | |
| *The Nilgiris* நீலகிரி | ஆம் | |
| *Tiruvarur* திருவாரூர் | ஏற்பாடாகியுள்ளது | |
| *Madurai* மதுரை | ஏற்பாடாகியுள்ளது | |
| *Nagappattinam* நாகப்பட்டினம் | ஏற்பாடாகியுள்ளது | |
| *Ramanathapuram* இராமநாதபுரம் | ஏற்பாடாகியுள்ளது | |
| *Chengalpattu*செங்கல்பட்டு | ஏற்பாடாகியுள்ளது | திரு. த.தமிழ்மகிழ்நன், திருமதி.கற்பகவள்ளி |
| *Coimbatore* கோயம்புத்தூர் | ஏற்பாடாகியுள்ளது | |
| *Tiruppur* திருப்பூர் | வழங்கவேண்டும் | |
| *Kanchipuram* காஞ்சிபுரம் | ஏற்பாடாகியுள்ளது | திரு. குறள்அமிழ்தன், திருமதி.சிந்தாமணி |
| *Virudhunagar* விருதுநகர் | வழங்கவேண்டும் | |
| *Theni* தேனி | ஏற்பாடாகியுள்ளது | |
| *Erode* ஈரோடு | ஏற்பாடாகியுள்ளது | |
| *Sivagangai* சிவகங்கை | ஏற்பாடாகியுள்ளது | |
| *Ranipet* இராணிப்பேட்டை | வழங்கவேண்டும் | |
| *Thoothukudi* தூத்துக்குடி | வழங்கவேண்டும் | |
| *Krishnagiri* கிருஷ்ணகிரி | வழங்கவேண்டும் | |

# திருக்குறள் நூல்கள் அறிவோம்..




"வள்ளுவரும் வான் மறையும்". முனைவர் இரா கஸ்தூரி ராசா. ஞாயிறு வெளியிடு. முதல் பதிப்பு 2004 மொத்த பக்கங்கள் 160 விலை ரூபாய் 60




"திருக்குறள்" பொருட்பால் முனைவர் பெ.கி. பிரபாகரன் கலைஞன் பதிப்பகம். முதல் பதிப்பு 2016. விலை ரூபாய் 96. மொத்த பக்கங்கள் 140




"திருக்குறளில் தேன் கதைகள்". அரிமா புலவர் ந.நாகராஜன். காவேரி பதிப்பகம் முதல் பதிப்பு 2000. விலை ரூபாய் 35 மொத்த பக்கங்கள் 170




"திருக்குறள் விளக்க நீதிக்கதைகள்" தொகுப்பு நான்கு. லட்சுமி அம்மாள் ரம்யா பதிப்பகம். முதல் பதிப்பு 2008 விலை ரூபாய் 36. மொத்த பக்கங்கள் 94.




"வள்ளுவரின் கோபமும் சாபமும்" கமலா கந்தசாமி. பக்கங்கள் 100, விலை ரூபாய் 90




"திருவள்ளுவர். ஞானவெட்டியான் என்னும் ஞானவெட்டி 1500". தாமரை நூலகம். எஸ்.பி ராமச்சந்திரன். முதல் பதிப்பு 1999, விலை ரூபாய் 100, மொத்த பக்கங்கள் 320.

*நன்றி. திரு.கருணாமூர்த்தி (முகநூல் பதிவு)*

# திருக்குறள் புரவலர்களுக்கு நன்றி...

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்திற்கு ஒரு தமிழ் பேராசிரியரை தொடக்கத்தில் பகுதி நேரமாகவும், தேவையானால் முழு நேரமாகவும் வழங்கி, "குறள் வழி" திருக்குறள் மாத இதழ் அட்டைப்பட விளம்பரமாக மாதம் ரூபாய் 10000 வழங்கி ஆதரவு அளிக்கும் வள்ளுவர் அறிவியல் மற்றும் மேலாண்மைக் கல்லூரிக்கும், அதன் தாளாளர் திரு.செங்குட்டுவன் அவர்களுக்கும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

பெட்ரோல் விலையேற்றத்தின்போது திருக்குறள் சொன்னால் ஒரு லிட்டர் பெட்ரோல் பரிசு என்று அறிவித்தவர். டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தியுடன் சமூகப்பணியில் துணைநின்றவர். வாழ்க பல்லாண்டு...






இவ்விதழ் மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்களுக்கு அச்சுப்பிரதியாக இலவசமாக சென்று சேரவேண்டும் என்று புரவலராக தன்னை இணைத்துக்கொண்ட நாமக்கல் நண்பர் திரு.கதிரவன் செழியன் அவர்களுக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். நன்றி... நன்றி...



***இன்னும் சில புரவலர்கள் கிடைத்தால் திருக்குறள் நூல்கள் சென்றுள்ள 280 அரசுப்பள்ளிகளுக்கும், அரசு தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் உள்ளிட்ட பலருக்கு "குறள் வழி" மாத இதழை இலவசமாக அனுப்பலாம். மேலும் ஒரு முழுநேர ஊழியரை பணியமர்த்தி நேர்த்தியாக செய்ய உறுதுணையாக இருக்கும்.***

***தொடர்புக்கு: Kural.Murothal@gmail.com***

வலைத்தமிழ்.com
www.ValaiTamil.com

# உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புத் தொகுப்புத் திட்டம்



சிகாகோவில் உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை நிறுவி, திருக்குறள் (தமிழ்ப் பண்பாட்டுக் கையேடு) என்ற நூலை கொண்டுவந்த அமெரிக்கத் தமிழர் முனைவர். அழகப்பா இராம்மோகன் அவரது நினைவாக இத்திட்டத்தை வலைத்தமிழ் அறிவித்து அமெரிக்காவை மையாமாகக் கொண்டு ஒரு தன்னார்வக் குழு அமைத்து மொழிபெயர்ப்புகளை தொகுத்து வருகிறது. வள்ளுவர் குரல் குடும்பம் இத்திட்டத்தில் இணைந்து நூல்கள் திரட்டலை வேகப்படுத்தியுள்ளது. மொழிபெயர்ப்புத் தொகுப்புப் பணிகள் முழுமையாக முடிந்து உலகத் தமிழ்ச் சமூகத்திற்கு முழு விவரங்களும் பகிரப்படும்.




இதுவரை வெளிவந்த அனைத்து நூல்களும் அடையாளம் காணப்பட்டு அச்சு நூல்கள் சென்னைக்கு வரவழைக்கப்பட்டுள்ளது.

**இத்திட்டத்தில் துணைநின்ற அனைவரது உதவிகளும், பங்களிப்பும் முறையாகப் பதிவுசெய்யப்படும்.**

கீழ்காணும் மொழிகளில் மட்டுமே எங்களுக்கு இன்னும் மொழிபெயர்ப்புகள் அடையாளம் காணப்பட்டு நூல்கள் தேடப்பட்டு வருகிறது. மற்றவை தொகுப்பில் சேர்ந்துவிட்டது.

1. Burmeze(Identified)
2. Czech
3. Dutch
4. Finnish
5. Italian(Italiano)
6. Konkani
7. Polish
8. Rajasthani
9. Russian
10. Spanish
11. Hungarian
12. Assamese
13. Brahui
14. Santhali
15. Garo
16. Armenian
17. Tok pisin

**மேலே உள்ள திருக்குறள் மொழிபெயர்ப்பு நூல்களைத் திரட்டி இத்திட்டத்திற்கு உதவ அன்புகூர்ந்து எங்களை தொடர்புகொள்க.**

E-Mail: Thirukkural@ValaiTamil.com

Whatsapp: +1 5715996029 (USA)

திட்ட ஒருங்கிணைப்பாளர்:
வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி

திட்டக் குழு:
திரு.இளங்கோவன் தங்கவேலு, USA (தலைவர்) || திரு.சி.இராசேந்திரன், IRS (ஓய்வு) ||
மருத்துவர் N.V.அஷ்ரப் குஞ்நுனு || திரு.செந்தில் துரைசாமி, (USA) || திரு. அஜய்குமார் செல்வன், (சென்னை)

## இதுவரை உலக அளவில் திருக்குறளை முழுமையாகப் படித்து முற்றோதல் செய்துள்ளவர்கள் யார்? ஆவணப்படுத்த புதிய இணையதளம்..

*2000 வது ஆண்டில் திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்கு பரிசுத் தொகை வழங்கும் திட்டத்தை அரசு தொடங்கியது. கடந்த 23 ஆண்டுகளில் தமிழ்நாடு முழுதும் சுமார் 812 பேர் மட்டுமே 1330 திருக்குறளையும் கூறி பரிசு பெற்றுள்ளார்கள் என்று தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அவ்வை அருள் தெரிவித்துள்ளார். 14.04.1972 முதல் இயங்கிவரும் திருச்சி திருமூலநாதன் அறக்கட்டளை 01.05.1998 முதல் 26 ஆண்டுகளாக திருக்குறள் ஒப்பிடுதல் போட்டியை நடத்திவருகிறது. அவர்கள் வழங்கும் 2000 ரூபாய் பரிசைப் பெற்றவர்கள் 400 பேருக்கு மேல் உள்ளனர். இதுபோல் வேறு அமைப்புகளும் செய்துகொண்டிருக்கலாம். அமெரிக்கா உள்ளிட்ட வெளிநாடுகளில் முற்றோதல் செய்தவர்கள் பலர் உள்ளனர்.*

*இவர்களை ஒரு குழுமமாக தொகுத்து வெளியிடுவதும், இவர்களுக்கு அனைத்திலும் தமிழ்ச்சமூகம் கல்வி, வேலைவாய்ப்பு, மேடைவாய்ப்பு, பொருளாதார வாய்ப்பு, தொழில் உள்ளிட்ட அனைத்திலும் முன்னுரிமை வழங்கவும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஒரு சிறப்பு இணையதள வசதியை ஏற்படுத்தி ஆவணப்படுத்தி வெளியிடுகிறது. உங்களுக்குத் தெரிந்தவர்களை பதிவு செய்ய [https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php](https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php) இங்கு செல்லவும்.*

*முதல்கட்டமாக இவர்கள் அனைவர்க்கும் உலகத்திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள்-இளநிலை சான்றிதழ் வழங்கி , பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களை அடையாளம் கண்டு திருக்குறள்-முதுநிலை சான்றிதழ் வழங்கவிருக்கிறோம். இளநிலை முடித்தவர்கள், முதுநிலை படிக்க ஊக்குவிக்கப்படுகிறார்கள்.*

திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்

பதிவு செய்ய

| # | மாணவர் எண் | பெயர் | நாடு | மாநிலம் | மாவட்டம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | 31 | செ. காவ்யா ஸ்ரீ | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |
| 2. | 30 | ஆ. தர்ஷினி | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |
| 3. | 29 | சொ. இ.சுபவர்தினி | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |
| 4. | 28 | ரா. மதுமித்ரா | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |
| 5. | 27 | ஸ்ரீ.மோனிஷ்காஸ்ரீ | India | Tamil Nadu | krishnagiri | 2023 |
| 6. | 26 | க. அஸ்வின் | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |
| 7. | 25 | செ. தேவா | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |
| 8. | 24 | ப. பேரன்புசெல்வன் | India | Tamil Nadu | tiruvannamalai | 2023 |

முற்றோதல் முடித்தவரின் பதிவு

மாணவர் / மாணவி பெயர் *
தந்தை பெயர் *
தந்தை தொழில் *
தாயின் பெயர் *
தாயின் தொழில் *
முற்றோதல் முடித்த ஆண்டு (உதாரணம் : 1983) * YYYY
மாநில அரசு பரிசு பெற்றவரா? * Select










குறள் சொல்வோம்..!
குறள் வழி வாழ்வோம்..!






# மாணவ- மாணவியர்களுக்கு ஓர் இனிய செய்தி

## 2024-2025 ஆம் கல்வியாண்டில் நமது வள்ளுவர் கல்லூரியில் சேரும் மாணவ மாணவியர்களுக்கு

## மூன்றாண்டுகளுக்கும் இலவசக் கல்வி!

- 500 திருக்குறள்களை ஒப்புவித்தால் ஒரு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1000 திருக்குறள்களை ஒப்புவித்தால் இரண்டு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1330 திருக்குறள்களை ஒப்புவித்தால் மூன்றாண்டும் கல்லூரிக் கட்டணம் இலவசம்.

## COURSES OFFERED

UNDER GRADUATE PROGRAMMES:

- B.A. English
- B.A. Tamil
- B.A. Public Administration
- BBA
- B.Com
- B.Com. (Computer Applications)
- B.Com. (Professional Accounting)
- BCA
- B.Sc. Computer Science
- B.Sc. Fashion Technology & Costume Designing
- B.Sc. Hotel Management & Catering Science
- B.Sc. Mathematics
- B.Sc. Physics

POST GRADUATE PROGRAMMES:

- M.A. English
- M.Com. (Computer Applications)
- M.Sc. Computer Science
- M.Sc. Mathematics

RESEARCH PROGRAMMES:

- M.Phil. Commerce
- Ph.D. Commerce

DIPLOMA COURSES:

- Diploma in Food Production
- Diploma in Banking & Finance

PROFESESSIONAL PROGRAMME

- M.B.A




@valluvarcollege @VCSM Events www.vcsm.ac.in 9944450507 / 9791726481 / 9791736481